# மோகன அமுதம்

பாகம்-1 செங்கமலக்கண்ணன் செவியமுதம்.

லீலாசுகரின் கிருஷ்ண கர்ணாமிருதத்தின்

தமிழ் மொழிபெயர்ப்பு

பாகம்-2 சொந்தப்பாடல்கள்



நான்கு வேதங்களையும் தமிழில் மொழிபெயர்த்துள்ள

வேதோபநிடத ஆசிரியர்

திரு. எம். ஆர். ஜம்புநாதன்

அவர்களின் முன்னுரை கொண்டது.



ஆசிரியை

வித்யா விசாரதா, வித்யாரத்னம், கவிதாரத்னம்,

பாஷணகேசரி

திருமதி ஹா. கி. வாலம்

பி. ஏ., பிரபாகர் (ஹிந்தி), விசாரத் (வடமொழி)

 1966 [விலை ரூ. 4/-

## சமர்ப்பணம்

-:O:-

வாய்மை கொல்லாமை வாழ்வின் கண்கள்
தூய்மை தாய்மை துலங்கு கண் மணிகள்
நேர்மை சீர்மை நாடித்துடிப்பு
ஈரம் ஈகை இரத்த ஓட்டம்
அன்பும் அருளும் அரும்பெரும் செல்வம்
மத மாச்சரியம் இல்லா மாண்புடை
இதயச் செல்வம் இந்திர பதவி
அதம் செய் ஆணவம் அழித்தல் வைகுந்தம்
நிதம் செய் பக்தி நேர் கைலாயம்
தம் மனந்துறத்தல் பிரும்மப்பட்டம்
இவ்விதமான இயல்புகள் இயற்கையில்
செவ்விதாய்ப் பொருந்தி சீர் பட வாழ்ந்து
திவ்விய மங்களச் செல்வன் ஈசுவரன்
பவ்விய மலரடி பாங்குடன் சென்ற
முருகன் அம்பிகை திருவடி வழுத்தி
அரும் பெரும் அமர பதவியடைந்த
அரிய தியாகி ஆலாசியம் துணைவி
பெருமையும் பொறுமையும் பொருந்திய செல்வி

அபயம் என்றடுத்தோர் ஆதரி பொன்மகள்
ஸ்வயம் பிரகாசமாய்ச்சுடரும் பேரொளி
தாய் எனும் ஓர் ஒளி தண்ணளி பொழிஒளி
அங்கமலக் கழல் அன்னை பொன்னடிகளில்
செங்கமலக் கண்ணன் செவியமுதம்
தாகம் தீர்க்கும் தழை மழை வண்ணன்
மோகன அமுதம் முந்திப் படைத்தேன்
ஏக நாயகன் ஏகாம்ரேசுவரன்
மோகம் தவிர்த்து முக்தியருள்கென!
யோகப்பெரும் ஒளி எமக்கும் அருள்கென!

---

## அனுக்ரஹ உரை

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம், காஞ்சிபுரம்.

முகாம்–நுங்கம்பாக்கம்
சென்னை.

தேதி 9–2–66.

ஸௌ. ஹா. கி. வாலம் அம்மாளால் இயற்றப்பட்டுள்ள "மோஹன 'அமுதம்" என்னும் நூலில் லீலாசுகர் ஸம்ஸ்கிருதத்தில் எழுதியுள்ள கிருஷ்ண கர்ணாமிருதத்தின் தமிழ்ச் செய்யுள் ஆக்கமான செங்கமலக் கண்ணன் செவியமுதமும், கண்ணனைப்பற்றிய சொந்தப் பாடல்களான "ஜோதியாய் வருவாய்" முதலிய செய்யுள்களும் அடங்கியிருக்கின்றன. மொழி பெயர்ப்பு ஸம்ஸ்கிருதத்திற்குப் பொருத்தமாய்ச் செந்தமிழில் அமைந்திருக்கிறது. சொந்தப் பாடல்களும் எளிய தமிழ் நடையில் பொருட் செறிவுடன் விளங்குகின்றன.

தமிழறிந்த சிறுவர்களும் பெரியவர்களும் இப் பாடல்களால் ஸ்ரீ கிருஷ்ணபிரானைத் துதித்து எல்லா மேன்மைகளையும் அடையுமாறு ஸ்ரீ மஹா சந்நிதானத்தில் அனுக்ரஹிக்கிறார்கள்.

ஆக்ஞைப்படி
(மானேஜர்)



## ஆசிரியை ஸ்ரீமதி ஹா. கி. வாலம்.

1. ஸ்ரீமதி ஹா. கி. வாலம், 1922-ம் ஆண்டு, ஆகஸ்டு–மீ" 22-ம் நாள் தென்னாட்டில் காவிரி வளம் பெற்ற திருச்சி நகரில் பிறந்தார். அவரது தந்தை யார் பிரசித்தி பெற்ற தேச பக்தர், காந்தீய இயக்கங் களில் முழு மனதுடன் ஈடுபட்டுப் பலமுறை சிறை சென்ற வீரர், காலம் சென்ற வழக்கறிஞர் திரு. என். ஹாலாஸ்யமய்யர் அவர்கள். காங்கிரஸ் ஆட்சி பீடத்துக்கு வந்த பிறகும்கூட ஹாலாஸ்யம் எவ்விதப் பதவியும் ஏற்றவரல்ல; அதற்கு ஆசைப்படவுமில்லை. அவர் ஒரு பிரபலமான பிரசங்கி. ஆங்கிலத்திலும், தமிழிலும் ஒப்பற்ற புலமை வாய்ந்தவர், மேதை.

2. அப்படிப்பட்ட தந்தையாருக்கு மூத்த மகளாகப் பிறக்கும் பேறு பெற்ற ஸ்ரீமதி வாலம் அவர்கள், தமது

இளமையிலேயே தேசபக்தி என்னும் செல்வக்குணம் தமது இரத்த நாடிகளிலேயே ஊறப்பெற்றார். சிறந்த, உயர்ந்த கல்விக்கு வேண்டிய எல்லா வகையான வித்தும் அப்பொழுதே அவர் மனதில் வேரூன்றி விட்டது. சின்னஞ்சிறு வயதிலேயே, அதாவது பதின்மூன்று முதல் பத்தொன்பதுக்குள், தமிழ் இலக்கியம், வடமொழி இலக்கியம் இரண்டையும் கசடறக் கற்றுணர்ந்ததோடு மட்டுமல்ல, பல இலக்கியப் படைப்புக்களையும் மனப்பாடமே செய்துவிட்டார். அந்தத் திறமையே இப்பொழுதுங்கூட,அவ்வகையான பாராமல் சொல்லும் திறமை, அவருக்கு உயர்தரமான பிரசங்கம் செய்ய ஒரு வரப்பிரசாதமாக அமைந்து விட்டது.

3. அவருக்கு இளமையிலேயே, பதின்மூன்றுவது வயதிலேயே, திருமணம் முடிந்து விட்டது. ஆனால் படிப்பின்மீதும், கல்விக்கடலைக் கரைகாண வேண்டும் என்ற ஓர் இயற்கை ஆர்வத்தினால் எழுந்த ஞானம் சேகரிக்க வேண்டும் என்ற எண்ணத்தினாலும், இலக்கியத்தின் மீதும் இருந்த விவரிக்க இயலாத மோகம் காரணமாக, விவாகத்துக்குப் பிறகும் விடாது தொடர்ந்து படித்தார். பிரைவேட்டாக பரீட்சை எழுதினார். இந்தி மொழியில் பிரபாகர் (ஹானர்ஸ்), வடமொழியில் விசாரதா (உயர் திறமை) ஆங்கிலம் பி. ஏ. ஆகிய பட்டங்கள் பெற்றார்.

4. அவரது திறமை அவர் தாய்மொழியாகிய தமிழ் மொழியுடன் மட்டும் நிற்கவில்லை. ஆங்கிலம், வடமொழி, இந்தி இலக்கியக் கடல்களிலும் தமிழிடம் உள்ள அதே ஆர்வத்துடன் மூழ்கினார்.

5. 1946-47ல் இந்தியா தேசம் முழுவதும் மத வெறி தலைவிரித்தாடியபோது, அவரது சொந்தமாகக்

கவிதை இயற்றும் திறன் முதன் முதலில் மீரட் நகரில் சூரியோதய தருணத்தில் வெளியாயிற்று. அப்பொழுது தான் பாரத நாடு சுதந்திரம் அடைந்து கொண்டிருந் தது. அக்காலம் அவரால் இயற்றப்பட்ட சில அழகிய தமிழ்ப் பாடல்கள் 1950 ம் ஆண்டில் "மோகன முறுவல்" என்ற பெயரில் பிரசுரிக்கப்பட்டது. மகாத்மா காந்தி யடிகளால் நடத்தப்பட்ட சுதந்திரப் போரை வர்ணிக் கும் புத்தகம் என்றும், இன்னும் மற்றும் பல வகையா னும் டி.கே.சி. முதலிய அரிய பெரிய அறிஞர்களாலும், கலைஞர்களாலும் "மோகன முறுவல்" பாராட்டப்பட் டது. தமிழில் உரை நடையில் எழுதப்பட்ட "வல்லபர் வாழ்க்கை" பாரதத்தின் இரும்பு மனிதர், சர்தார் வல்ல பாய் படேல் அவர்களின் வாழ்க்கைச் சரித்திரம், 1951-ல் பிரசுரிக்கப்பட்டது. அமரகவி பாரதியாரின் பாஞ்சாலி சப தம், ஆங்கிலக்கவிதை வடிவில் மொழிபெயர்ப்பு, 1957-ல் பிரசுரிக்கப்பட்டது, பாராட்டப்பட்டது. 1960-ம் ஆண்டு "மோகன முரளி" என்னும் கவிதைத் தொகுதி வெளி யாயிற்று. அறிஞர்கள், கவிஞர்கள், இலக்கியமேதை கள் மற்றும் பல்கலை வல்லுநர்களின் பாராட்டையும், பெருமதிப்பையும் பெற்றது. இவருக்கு கவிதாரத்னம், ஸகலகலாவல்லி, நான்மொழி வித்தகி என்றெல்லாம் பட்டங்கள் கிடைத்தன. 1963-ல் "மோகன லதிகா" என்ற பெயரில் வந்த ஹிந்தி நூல் வடநாட்டாருக்குத் தென்னகத்தின் "சூடிக்கொடுத்த சுடர்க்கொடி"யின் பெருமையையும், ஆழ்வார் பக்தர்களின் அருமையையும் அறிமுகப்படுத்தும் வகையில் அமைந்தது.

1964-ல், கண்ணன் அருளிய கீதையைப் பாலர் களும் படித்துப்பயனுறும் வகையில், எளிய தமிழ்ச் செய் யுள் நடையில் "மோகன வாணி", பாலபகவத் கீதை என்னும் பெயரில் பிரசுரித்துள்ளார். அன்னாரின் சேவையைத் தமிழ் கூறும் நல்லுலகம் வியந்தது.

மதருஸ் ஆரோக்கிய ஆசிரமம் இப்பணியைப் போற்றும் வகையில், இவருக்கு "வித்யா ரத்னம்", "வித்யா விசாரதா" என்ற பட்டங்களைக் கொடுத்து உற்சாகம் அளித்திருக்கிறது.

1965-ல் இவர் இயற்றிய "ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம்", "பஜகோவிந்தம்"—இவைகளின் தமிழ்ச் செய்யுள் ஆக்கத்தைக் காஞ்சீபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் பிரசுரித்து மக்களிடம் பக்தியை வளர்த்து வருகிறது.

1966-ல், லீலா சுகரின், கிருஷ்ண கர்ணாமிருதத்தைத் தமிழ்ச் செய்யுள் ஆக்கி, அத்துடன் கண்ணன் மீது அவர் இயற்றியுள்ள கவிதைகளையும் சேர்த்து "மோகன அமுதம்" என்ற புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்.

6. "இராமாயண இரத்தினாகரம்" என்னும், கம்பராமாயணம், துளசி ராமாயணம், வால்மீகி ராமாயணம் மூன்றையும் ஒப்பு நோக்கும் இலக்கிய விமரிசனம், "விவசாயி" என்னும் வாரப்பத்திரிகையில் 1951 முதல் 1958 வரையில் தொடர் கட்டுரையாக வெளி வந்தது. இத்தொகுதியை, "மோகனக்கடல்" என்னும் தலைப்பில் புத்தக வடிவில் தற்பொழுது கொண்டுவர இருக்கிறார்.

7. இந்தியிலும், தமிழிலும் உயர்தரமான பிரசங்கம் புரிவதில் அவர் வல்லவர். தனது தாயகமாகிய தமிழ் நாட்டின் பல பாகங்கள் மற்றும் வடஇந்தியாவில் டில்லி, கல்கத்தா, பம்பாய், டாடா நகர், பூனா, புஸாவல், கல்யாண், தேவலாலி முதலிய இடங்களில் இலக்கிய விழாக்கள், பட்டி மன்றங்கள், மாநாடுகள் தினக்

கொண்டாட்டங்கள் இவைகளில் தலைமை வகிக்கவும், இலக்கியச் செல்வங்கள் குறித்துப் பேசவும் பல முறைகள் அழைக்கப்பட்டுச் சென்று வந்திருக்கிறார். அகில இந்திய ரேடியோ, டில்லி, பம்பாய், திருச்சியில் பல முறை பேசியிருக்கிறார். கவியரங்கங்களில் கலந்து கொண்டிருக்கிறார்.

இவர் பேச்சின் திறமையைக்கண்டு பிரமிக்கும் தேவலாலி, தென்னிந்தியக் கலாசார சங்கத்தார், 1964-ல் இவருக்கு "பாஷண கேசரி" என்னும் பட்டத்தை ஒரு சிறப்பு விழாவில் அளித்தார்கள். பல்வேறு சங்கத்தார்கள் இவர் பெயருடன் "சிங்கநாதம்", "சங்கநாதம்" என்றும் இணைத்து அழைக்கிறார்கள்.

8. 1953-ம் ஆண்டு முதல் 1957-ம் ஆண்டு வரை பூனா கலைக்கழகத்தின் தலைவியாக இருந்து இலக்கியப் பணி புரிந்து இருக்கிறார். பின்னர் தேவலாலி தென்னிந்தியர் சங்கத்தின் தலைவியாக இருந்துள்ளார். சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், பூனா பண்டர்கார் ரிசர்ச்சு இன்ஸ்டிடியூட், பம்பாய் இண்டியன் பி.இ.என். இவைகளின் அங்கத்தினர். அவர் செல்லும் எல்லா நகரங்களிலும் தென்னிந்திய சமூகத்தினர் செய்யும் எல்லா வகைச் சமூக வேலைகளிலும் நெருங்கிய தொடர்பும், பங்கும் கொண்டு, செயலாற்றி இருக்கிறார்.

9. அவரது முக்கிய ஈடுபாடு இலக்கியம். இலக்கியத்தின் பல துறைகளிலும் மிக்க ஆர்வமுள்ளவர். இராணுவப் பொறி இயல் வல்லுநராகத் தொழில்புரிந்து வரும், இலக்கியம், கலை, சமூகத்தொண்டு இவைகளில் ஆற்றல் காட்டிவரும், கவிதா சக்தி வாய்ந்தவருமான

இவருடைய கணவர் திரு பூ. ஸா. கிருஷ்ணஸ்வாமி இவருடைய இலக்கிய ஆர்வத்திற்கு உற்ற துணையாக அமைந்திருப்பது போற்றத்தக்கதே.

10. இதுவரை பிரசுரமாகாத தமிழ்க் கவிதைகள் 1000க்கு அதிகம், இந்திப் பாடல்கள் 100, ஆங்கிலம் 100, சம்ஸ்கிருதம் 100 இருக்கின்றன. அவை யாவும் தெய்வ பக்தி, தேச பக்தி, இயற்கையின் வருணனை இவைகளைச் சிறப்பாகக் கூறுகின்றன. தனிக்காவியங்கள் எத்தனையோ இருக்கின்றன.

குடத்தில் இட்ட இச்சுடர்களை வெளி உலகத்தில் பிரகாசிக்கச் செய்து தமிழன்னையை மகிழ்விக்கும் பணியில் தமிழன்பர்கள் ஈடுபடுதல் வேண்டும்!

---

# முன்னுரை

## திரு. எம். ஆர். ஜம்புநாதன்

மோகன அமுதம் பாகங்கள் இரண்டு.

1. கிருஷ்ண கர்ணம்ருதத்தின் மொழி பெயர்ப்பான செங்கமலக்கண்ணன் செவியமுதம்.

2. சொந்தப்பாடல்கள்.

### ஸ்ரீ கிருஷ்ணன்

ஸ்ரீ கிருஷ்ணனை வேதரிஷிகளும், வியாசர் முதலிய முனிவரர்களும் விரும்பினார்கள். அக்கினித் தவன் கிருஷ்ணன் ஆனான் என ஒரு மறைக்க கதையுண்டு. கிருஷ்ணனிடமிருந்து சூரியனும் சூரியனிடமிருந்து கிருஷ்ணனும் தோன்றினார்கள் என மறைகள் கூறும். ருக்வேதம் 1. 123. 9.

கிருஷ்ண அங்கிரஸர் என்று பெயர் கொண்ட புகழ்பெற்ற வேதரிஷி ஒருவர் இருந்தார். 10. 4. 43 கண்வரும் கிருஷ்ணன் என அழைக்கப்பட்டார். ருக். முற்காலத்தில் கிருஷ்ணன் என்று பெயர் கொண்ட பலர் இருந்தனர். ஆயிரக்கணக்கான கிருஷ்ணர்கள் இருந்தார்கள் என்று ருக்வேதம் கூறுகிறது. காஷ்டம் ஏந்திக் கனலை எழுப்பியவர் களும் கிருஷ்ணர்கள் ஆனார்கள். ருக் 1.141.8.

தேவகி கிருஷ்ணனைச் சாந்தோக்யம் கூறுகிறது. வியாஸர் கிருஷ்ணனைப் பற்றினார்.

பாரத கிருஷ்ணன் பாஞ்சாலியைப் பாலித்தான். பார்த்தனையும் அவன் தேரையும் செலுத்தினான். பகவத்கீதையைத் தந்தான்.

## கிரீடை

பக்தியால் பெருகும் ஸ்ரீ கிருஷ்ணனுடைய பால்ய சேஷ்டைகளையும், லீலைகளையும் ஸ்ரீமத் பாகவதத்தில் காண்கிறோம்.

கோபிகள் கண்ணனுடன் சேர்ந்து ராஸக் கிரீடை செய்தார்கள். அவனைச் சூழ்ந்து நடனம் ஆடினார்கள். மகிழ்ந்தார்கள். பக்தியில் மெய்மறந்து ஆனந்த பரவசர் ஆனார்கள் எனச் சுகர் சொன்னார்.

இராஸக்கிரீடையை நினைக்குங்கால் வேதங்களில் வரும் சில இடங்கள் என் மனத்தில் எழுகின்றன.

தீர்க்கதமஸர் வனத்தில் புற்களையும், புதர்களையும் செடி கொடிகளையும் எரித்துச்செல்லும் அக்கினியைப் பார்த்து இரச பாவத்துடன் கூறினார். "சுவாலைகளாம் கேசினிகள் அக்கினியோடு ஆடுகிறார்கள். தழுவுகிறார்கள். மறைந்திருந்த குழலிகள் (கேசினியர்) அவனைக் கண்டு களிக்கிறார்கள். புத்துயிர் பெறுகிறார்கள். சிறந்த கேசினிகள் எழுகிறார்கள். கணவருடன் பெருமிதம் அடைகிறார்கள்" ருக். 140. 1. 8.

## தவளை மண்டூகம்

வசிஷ்டர் மார்மத் தவளைகளின் கிரீடைகளைக் கூறினார். மழை தோன்றுகிறது. புவியில் பொழிகிறது வெப்பம் அகன்றது. விரதம் முடிந்தது. சர்மங்கள் ஜீவனைப் பெறுகின்றன.

தவப்புதல்வர்கள் புலனுகிறார்கள்.

தவளைகள் எழுகின்றன. நீராடுகின்றன. தூய்மை அடைகின்றன. தோய்கின்றன. மகிழ்ச்சி ஆரவாரம். முழக்கம்.

விப்ரர்கள் பாடுகிறார்கள். குரல் சமம். கருத்து சமம். செயல் சமம். தவளைகள் தத்தித் துள்ளுகின்றன. பரவுகின்றன. அன்பைப் பொழிகின்றன. ஒன்றை ஒன்று காண்கிறது. ஒன்றோடு ஒன்று மொழிகிறது. ஒன்றை ஒன்று தழுவுகிறது. தாங்குகிறது.

எங்கும் ஆடல், பாடல், ஆனந்தம், இசை, சுருதி, ஆசி, ஆம். நோக்கமும் உண்டு. ஒன்று கற்கிறது, மற்றொன்று கற்பிக்கிறது. "எழுமின், எழுமின்" என மண்டூகங்கள் முழங்குகின்றன. எல்லாத் தவளைகளும் மழை நீரிலே, நீத்தார் எல்லாரும் அமுதத்திலே இன்புறுகின்றன, இன்புறுகிறார்கள். ருக் 102-7. ஜீவன், ரஸமாம் பிரம்மத்தில் இன்புறும் உண்மைகளை மாண்டூக்ய உபநிஷதமும், மாண்டூக்ய காரிகையும் விளக்குகின்றன.

தவளையின் மழைக்கால முழக்கத்தைக் கேட்டு இராதை கண்ணனை நினைந்தார் என மைதில கோகிலம் வித்யாபதி கவி கூறுகிறார்.

காயமாம் கோபி, கருத்தாம் கிருஷ்ணனுடன் களித்தார், ஜீவான்மாவாம் கோபி பரமான்மாவாம் கிருஷ்ணனோடு களித்தார் எனக்கூடமாய்ச் சொல் வதை அனுசரித்துப் பல காவியங்கள் தோன்றின. அவற்றில் ஸ்ரீ ஜெயதேவர் இயற்றிய அஷ்டபதியும், ஸ்ரீ லீலா சுகர் இயற்றி அருளிய கிருஷ்ண கர்ணும் ருதமும் மிகச் சிறந்தவை.

## லீலா சுகர்

கிருஷ்ண கர்ணும்ருதம் என்ற நூலைப் பதின் மூன்றாவது நூற்றாண்டில் ஸ்ரீ லீலா சுகர் இயற்றி னார். அவரை வில்வ மங்களன் எனவும், கோதண்ட மங்களன் எனவும் அழைப்பார்கள். அவர் தாயின் பெயர் நீலி. தந்தையின் பெயர் தாமோதரன். அவர் ஸோமகிரி, சிந்தாமணி, ஆதித்யப்பிரக்ஞர், ஈசானதேவர் முதலியவர்களிடம் பல சந்தேகங் களைத் தெளிந்து கொண்டார் எனச் சிலர் கூறுவர். அவர் திருவனந்தபுரத்தில் பாரூரில் உள்ள புத்தான் கீறையில் பிறந்து, வளர்ந்து, பாரத நாடெங்கும் பிற்பாடு யாத்திரை செய்ததாகத் தெரிகிறது.

ஸ்ரீ லீலா சுகர் வடமொழிப் புலவர். பல நூல் களின் ஆசிரியர். அவர் இயற்றிய அபிநவ கௌஸ்துப மாலை, தட்சிணாமூர்த்தி ஸ்தவம். பால

கிருஷ்ண ஸ்துதி, பாவனு முகுரம், துர்க்கா ஸ்துதி என்னும் நூல்களை அறிஞர்கள் நன்கு அறிவார்கள்.

அவர் எழுதிய காலவதம்—எமனைக் கொன்ற கதை—பெயர் பெற்றது. ஸ்ரீ சங்கரருடைய கேனுேப நிடத பாஷ்யத்துக்கு அவர் எழுதிய இனிய உரை உண்டு. அவர் தொகுத்த இலக்கண நூல்களையும் அறிகிறேம். ஆனுல் அவருக்குப் பெயரையும் அழியாப் புகழையும் அளித்தது கிருஷ்ண கர்ணுமிருதம்.

## கிருஷ்ண கர்ணும்ருதம்

ஸ்ரீமத் கிருஷ்ண கர்ணுமிருதம் என்னும் சிறு காவியம் ஸ்ரீரங்கம் வாணி விலாஸ் அச்சகத்தில் வட மொழியில் மூல நூல் பிரசுரம் ஆயிற்று. இது மூன்று ஆஸ்வாசங்கள் (நின்று மூச்சு விடும் இடங்கள்) அத்யாயங்கள் கொண்டது. முதலாவதிலும் மூன்ருவதிலும், ஸ்ரீ பாலகிருஷ்ணனின் சிறந்த பெருமைகளையும், இரண்டாவதில் பாலகிருஷ்ணனின் விளையாடல்களையும் பார்க்கிறேம். மொத்த சுலோகங்கள் முந்நூற்றுப் பத்தொன்பது.

## நூல் ஏன்?

இலக்கியப் பயிற்சிக்கும் காவியச் சுவையமுது ஊற்றைப் பருகுவதற்கும் இந்நூல் உதவும்.

புவிமிசை வாழும் பெரியவர் யாவரும்
போற்றும் சுவை நலம் பயின்றிடுக !
கவிமுதல் ரசிகர் நிபுணர்கள் காதில்
காவியச் சுவையமுதூற்றிடுக!

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



அவி என ஐம்புனல் தவக்கனல் பெய்த
ஞானியர், யோகியர், முனி நாதர்
செவியமுதாகும் செங்கண் சிறுவன்
செவியமுதம் புவி வாழ்ந்திடுக! ப. 25-26.

பாலன்

கிருஷ்ணன் மனதை மயக்கும் பாலன். மதிவதனன் அவனுக்கு நிகர் எத்தேவரும் இல்லை.

அந்த மிகுந்த அந்த இளமை
அம்புயச் செவ்வொளி முழு மதிவதனம்
மந்தஹாச மணி இதழ் அழகு
மனதை மயக்கும் மோகன வடிவு
அந்தக்கருணை அலை பாய் கண்கள்
ஆரமுதக் கடல் ஆகிய உருவம்
நந்தன் மைந்தன் தன்னிடமன்றி
உண்மை, உண்மை உம்பரில் இல்லை.
பக்கம் 14.

பாலலீலை

கிருஷ்ணனுடைய சிறுபிள்ளைத்தனமான குறும்புகளையும், விளையாடல்களையும் புகழ்கிறது இந்நூல். கூடவே மனிதத்தன்மை கடந்த அவனது தெய்வத் தன்மையையும் ஆங்காங்கே விளக்குகிறது.

'' அம்மா, அச்சுதன் மண் தின்ருன்
அங்கே பார்.'' என்ருன் பலதேவன்
' இம்மாதிரி நீ செய்தாயா ?
'' இல்லை, அண்ணன் பொய் சொல்லி ''
'' சும்மாத்திறடா, வாய், திருடா,''
சொகுசாய் வாய் திறந்தான் மாயன்
அம்மா கண்டு மலைத்தாளே
அகில சராசரம் அதற்குள்ளே ப. 44—45

நடனக்குழு

அங்கனை அங்கனை நடுவிலே ஆயர் கோன்
மங்களன் மங்களன் இடையிலோர் பெண்கனி
இங்ஙனம் குழுமிய இன்பக் கூட்டத்திலே
செங்கனிவாய்க் குழல் சீதரன் ஊதினுன்.
ப. 37.

மயிலுடன் அன்னமும் மனங்களித்தாடவே
குயிலுடன் கிளிக்குழாம் கொஞ்சியே பாடவே
துயில் இலாக்கஞ்சனைக் கொன்று நீருக்கிய
மயிலுடைச்சாயலான் மணிக்குழல் ஊதினுன்.
ப. 37

நாயகன்

இவ்வமுதம் நாயக பாவத்தைப் பொழிகிறது.
ஜல், ஜல், ஜல் எனச்சிலம்பொலி கொஞ்சப்
பல்கலை மதுபொழி பங்கயத்தளிர்கள்

மெல்லிய திருவடி புல்கிடப் பூமி
நல்லிசை ஊதி என் நாயகன் வந்தான்.
ப. 19.

கலங்குபவர் கண் மழை
கணம் விலக்கு கானச் சுடர்
அலங்கலணி மார்பகம்,
அகில லோக ஜீவாமிருதம்
இலங்கு ஜக மோகனன்
எனது நாயகம் வாழ்கவே. ப. 21.

மங்களம்

மங்கள மணிவண்ணன் மாட்சிமை பாராட்டும்
செங்கமலக்கண்ணன் செவியமுதம் வாழி.
ப. 106.

ஆசிரியை

இந்தக் கர்ணாமிருதத்தைத் தமிழ் செய்தவர் பல மோகன நூல் மாலைகளை எழுதிய ஸ்ரீமதி ஹா. கி. வாலம். அவர் வடமொழிப் புலவர். வியாகரணத்தை நன்கு கற்றவர். காவியங்களின் நுட்பங்களை நன்கு அறிந்தவர். இராமாயணம், பாரதம், பாகவதம் மூன்றின் இலக்கியச் சுவையினைப் பருகியவர். லீலா சுகர் போன்ற கிருஷ்ண பக்தர். தூய மனம் படைத்தவர். தமிழ்க்களஞ்சியம். சங்க நூல்களையும், பாசுரங்களையும், தேவாரங்களையும், மணிவாசகரையும், இராமலிங்கரையும், தாயுமானவரையும், பாரதியாரையும் மனப்பாடம் செய்தவர். ஒரு நூலை ஒரு முறை

படித்தால் போதும். அவர் மனதில் பதிந்துவிடும். பிறகு விரும்புங்கால் அதைப் பிரவாகமாய்ப் பொழி வார். சொல் வல்லமை உண்டு. சந்தஸ் தேவியின் அருள் பெற்றவர்.

இவ்வாற்றல்கள் நிரம்பப் பெற்றதால் ஸ்ரீ கிருஷ்ண கர்ணாமிருதத்தைச் சொற்சுவையும் பொருட்சுவையும் குன்றாமல் தமிழ் மொழிபெயர்ப்புச் செய்வதில் வெற்றி கண்டார். இது 1952–ல் இயற் றப்பட்டது.

லீலா சுகரே தமிழ் மகளாய்ப் பிறந்து செங்க மலக்கண்ணன் செவியமுதம் எழுதியது போல் தோன்றுகிறது. இது திறப்படுத்தும் நித்திய தாரைகளோடு தமிழை வளப்படுத்தும். ஆசிரியை கண்ணன் மீது பாடிய பாக்களை இரண்டாவது பாகம் ஆன சொந்தப் பாடல்களில் காணலாம்.

## சொந்தப் பாடல்கள்

### அன்னம்

பதினைந்து வருடங்கள் முன்னர் :–

ஆனந்தப் பொய்கையிலே
அறிவென்னும் தாமரை மேல்
தானந்த மான தொரு
தயைத் தென்னஞ் சோலையிலே

கானமெனுந் தோகை
களி நடனம் செய்து வர
மோனம் எனும் அன்னம் ப. 165–166.

ஸ்ரீமதி வாலத்துக்கு அருளிய பாடல்கள்.

ஹம்ஸனும் கண்ணனின் பல தோற்றங்களைப் பல தலைப்புக்களில் ஆசிரியை தருகிறார்.

கண்ணன்

கண்ணன் எங்கும் இருக்கிறான். அவன் ஏகன்.

பசும் புற்றரையாய்ப் படர்வான் சுடராய்
பசுமாமுகிலாய்ப் பனிதோய் மலையாய்
விசும்பின் கதிராய் விண்மீன் சுடராய்
பசுந்தேன் மலராய்ப் படர் பூம் பொடியாய்
பகர் பைங்கொடியாய்க் கொடி சூழ் மரமாய்ப்
பசிதீர் பயிராய்ப் பலவாம் உயிராம்
புவனப் பொருளாய் நிறைவான் ஒருவன்.
ப. 130.

யார் ?

அவன் யார்? கவிஞர் ரிஷிப்புதல்வி கார்க்கியைப் போல் விடையளித்துப் பாடுகிறார்.

அதுவும் இதுவும் ஆவானே
அல்லவை நல்லவை ஆவானே

மதியும் சுடரும் ஆவானே
மண்டலம் விண்டலம் ஆவானே
துதியும் நிந்தையும் ஆவானே
தூயவை கெட்டவை ஆவானே
கதியும் கழலும் தருவானே
கண்ணன் என்ற பெருமானே. ப.113

மணமகன்

கண்ணன் மணமகனாய்த் தோன்றுகிறான்.

கண் கவர் அழகன் கருவமிலாதான்
மண் விண் ஆண்டும் மதம் பிடியாதான்
திண்புயச் செம்மல் திருமால் நெடியான்
பெண் உயர்வறிவான் பேடிமை இல்லான்.
ப. 181.

கண்ணனின் மணமகள்

கண்ணனுடைய மணமகள் மலர்மகள்.

பாற்கடல் நடுவில் பங்கய மலரில்
சீர்த்திரு நின்றாள்: தேவர்கள் கண்டார்
ஆர்த்தன முரசம்: ஆர்த்தன சங்கம்
நாற்புறம் நோக்கினள்: நன் மலர் மங்கை.
ப. 178.

## திருமணம்

அன்னையும் அண்ணலுமாகும் கண்ணனின் திரு மணக் காட்சி.

அன்னையும் நோக்க அண்ணலும் நோக்கினன்
கன்னியும் நோக்கக் கண்ணனும் நோக்கினன்
முன் அவள் நோக்க முகுந்தனும் நோக்கினன்
கன்னிகை நோக்கக் கார் முகில் நோக்கினன்
ப. 181.

## திருநடம்

மர்த்தன நர்த்தனம் அற்புதம் அன்றோ?
கர்த்தனின் திருநடம் காண்பதும் உண்டோ?
உத்தமர் சித்தத்தில் நித்தமும் நிறையும்
சத்தியத் தத்துவ தாண்டவம் அல்லால்!
ப. 151.

## அமுதம்

சொந்தப் பாடல்களில் உள்ள "ஜோதியே, வருவாய்," என்பதைப் படிக்குங்கால் காயத்ரியும், "திருமாலின் பெருமை," யை நோக்குங்கால் உப நிடதமும் மனத்தில் தோன்றுகின்றது.

"மறவேன் கண்டாய் மாலே" பாசுரத்தையும்; "கண்ணே, மணியே வா, வா, வா," "பாரதியையும் ஞாபகப்படுத்துகின்றன.

"அங்கையாலணைத் தருளிய பங்கயச் செல்வி" யைச் சுவைக்குங்கால் நமது விருப்பங்களும் விளங்குகின்றன.

இப்பாக்களைப் பாடுங்கால் மனத்தில் பக்தி பொங்குகிறது. பயம் ஏங்குகிறது. துக்கம் தளர்கிறது. தண்மை வளர்கிறது. உண்மை ஊறுகிறது. உள்ளத்தில் அமுதம் பொழிகிறது.

## வாழ்த்து

மோகன அமுதத்தை எழுதியவர் திருமதி ஹா. கி. வாலம். அவர் சந்தச் செல்வி. கலைமகள். அவர் நாவிலே வியாசரும் கம்பரும் நடிக்கிறார்கள். மீராவும் ஆண்டாளும் பாடுகிறார்கள். சாந்த சமுத்திரம். ஆவேசக் கடல். சகல கலா வல்லி. சரஸ்வதிக்கு மோகன மாலைகளை அளித்து முப்பது வயதுக்குள் புண்ணியமும் புகழும் பெற்ற பாக்கியவதி. பண் சேர் மொழியும், பாடுந் திறனும், அட்சர சக்தியின் திருவருளும் பெற்ற தெய்வ மகள். பாரதி கண்ட புதுமைப் பெண். பொன்னையும் புது உடையையும், சுவையையும் சுகபோகத்தையும், மாளிகையையும், நிலத்தையும் விரும்பாதவர். இந்திரிய ஜயத்தையும், இணையற்ற பலத்தையும், மந்தருடன் கூடாத மன உறுதியையும் விரும்பும் பாரதத் தாய்.

தாய் எழுதிய மோகன அமுதத்தைப் புவியையோ, கவியையோ, கடவுளையோ விரும்பும் எவரும் படித்துப் பயன் பெறலாம்.

இந்த மேதை எழுதிப் பிரசுரமான நூல்கள் பத்து. ஆகாதவை ஆயிரம்.

பாரதி உயிருடன் இருந்தபொழுது அவரைச் சிறப்பிக்க மறந்தோம். இப்பொழுது வானளாவப் புகழ்கிறோம். நான்கு மொழிகளிலும் இனிய கவிதை இயற்ற வல்ல மொழிச் செல்வி நமக்குக் கிடைத்திருப்பது நல்லதொரு அபூர்வ வாய்ப்பு. அவரது நூல்களைப் பிரசுரிக்க முயல வேண்டியது தமிழர் கடமை.

ஆசிரியை ஹா. கி. வாலத்துக்கு இறைவன் எல்லாச் செல்வங்களையும் அருளவேண்டும். எனது மனமுவந்த வாழ்த்துக்கள். பொங்கல் திருநாளாம் இம்மங்கல நன்னாளில் அவரது கவிதை வளம் பாற்கடலமுதம் போல் மேன்மேலும் பொங்குக என ஆசீர்வதிக்கிறேன்.

ராதா நிவாஸ், கார்,<br>
அரபிக்கடல் கரைஓரம்<br>
பம்பாய்-52,<br>
14—1—1966

எம். ஆர். ஜம்புநாதன்.

ஆசிரியர்—(வேதங்கள், உபநிஷத்துக்கள், ஏனைய நூல்கள்)

# பொருளடக்கம்


| எண் | பொருள் | பக்கம் |
|---|---|---|
| | **முதற்பாகம்** | |
| | **— செங்கமலக்கண்ணன் செவியமுதம் —** | |
| 1. | முதல் ஆஸ்வாஸம் ... | 1 |
| 2. | இரண்டாவது ஆஸ்வாஸம் ... | 27 |
| 3. | மூன்றும் ஆஸ்வாஸம் ... | 61 |
| | **இரண்டாம் பாகம்** | |
| | **— சொந்தப் பாடல்கள் —** | |
| 4. | ஜோதியாய் வருவாய் ... | 108 |
| 5. | கண்ணே, மணியே! வா, வா, வா ... | 109 |
| 6. | திருமாலின் பெருமை ... | 112 |
| 7. | கண்ணன் துதி ... | 114 |
| 8. | உள் ஒலி ... | 118 |
| 9. | கண்ணன் மணிவண்ணன் ... | 123 |
| 10. | அபயம் ... | 125 |

| | | |
|---|---|---|
| 11. | மதுராபதி மா மணி | ... 128 |
| 12. | நிறையும் ஒருவன் | ... 130 |
| 13. | மறவேன் கண்டாய், மாலே | ... 133 |
| 14. | தூக்கம் துற, பரந்தாமா | ... 136 |
| 15. | வந்தனே வாஸுதேவா | ... 140 |
| 16. | என் செய்வான் மாரன் | ... 144 |
| 17. | இந்திரா மந்திரமே அருள் | ... 147 |
| 18. | காளிங்க மர்த்தன நர்த்தனம் | ... 149 |
| 19. | ஆடுவதும் ஆட்டுவதும்அவனே | ... 154 |
| 20. | கண்ணன் வண்ணம் | ... 157 |
| 21. | போற்றுகிறேன் பரமா | ... 160 |
| 22. | பால மணி நீலா | ... 163 |
| 23. | அங்கையாலனைத் தருளிய பங்கயச் செல்வி | ... 164 |
| 24. | வரம் தா இந்திரையே | ... 171 |
| 25 | பாலா நாயகி சரணம் | ... 175 |
| 26. | நீல மாலை | ... 177 |
| 27. | கனகச் சுடர்க்கொடி | ... 183 |


---

# மோகன அமுதம்

## ஸ்ரீ கிருஷ்ண கர்ணாம்ருதம்
## செங்கமலக்கண்ணன் செவியமுதம்.

### வணக்கம்

நந்த கோபரின் மைந்தன் மாதவன்
செந்திருவளர் தாமரைப்பதன்
வந்தனைசெய எந்தனுக்கருள்
சிந்தனுமணி வெல்க வெல்கவே.

காமன் தாதையைக்கண்டு கொள்ளவே
நாமத்தேன் ரஸம் நாமும் உண்ணவே
பூமன் சீதரன் பாதபக்தி சொல்
ஸோமகிரி குரு ஜகத்தில் வாழ்கவே.

கற்றைவார்குழல் கமலக்கண்ணனின்
முற்றிடாத கற்பகத்தளிர்ப்பதம்
சற்றும் நீங்கிடாள் வெற்றிமாமகள்
பற்றியவனையே வெற்றி கொள்ளுவாள். 1

### தொடக்கம்

பிரும்மப்பரஞ்சோதி பரா பராத்மா
தம்மைப்பணிந்தோர் கைசீர்முக்தி ஈயும்
செம்மை இசைச்செல்வம், சேர்ந்தோர்க்குத்தெய்வம்
மும்மை உலகாளும் மூலப்பொருளாம்.

செம்பாரிஜாதமழை தேவமகள் தூவ
அம்பரம் அவிழ்ந்துவிழ அங்கனைகள் சூழ

அம்புஜமலர்க்கண்ணன் ஆனந்தவண்ணன்
எம்பிரான் பாலனாய் இருக்கிறான் பாரீர். 2

குறும்பு கொப்பளிக்கும் கோல
கோமள நயனப்பார்வை,
கரும்புபோல் இனிக்கும் காந்திச்
சுடரொளிக்கருணைப்பார்வை,
நறும் மலர்வளரும் நங்கை
நாயகிமகிழும் பார்வை
அரும்பிய அழகன் ஆதி
ஜோதியாம் அமல மூர்த்தி.

இரும்பு கொப்பளிக்கும் தண்ணீர்
எழில்மிகு யமுனையாற்றின்
நிறங்கிளர் கரையில் நின்று
நித்தியம் லீலை செய்யும்
கருங்குழற்கரியமேனிகரும்பன
இனிமை சொட்டும்
அரும்சிறுபாலன் அய்யன்
அனபனை நினைதல் செய்வாம். 3

மாமயிற்பீலி வேய்ந்த
மங்களக்குழலன, மன்னன்,
ஸோமனைப்பிழிந்தெடுத்த
சுவை சொட்டும் வதனம், சோதிக்
காமனின் வரவு தோனறங்
கவர்ச்சியைக்கொட்டுதேகன்
நாமகள் வெட்கு கான மழைபொழி
வேணுநாதன,

பருத்தமென் இதய மொக்குப்
பாலகிமார்கள் சூழ்ந்தோன்
திருத்தகு உலகமெல்லாம்
திகைத்திடு அழகுபூண்டோன்
ஒருத்தனாய் உலகளந்த
உத்தம ஜோதி என்றன்
கருத்திலே வாழுதம்மா
காந்தியாய் நிறையுதம்மா. 4

இனிமை பொழிந்திடு இனிய செந்தாமரை
மாவதனன்,
நுனிமுடி தோகையின் பீலியணிந்திடு
நீள்குழலன்
முனிவுடன் மோகமும் நீக்கும் நிமலன்
என் மன மலரில்
கனிவுடன் காருண்யக்கண்ணன் எனும் ஒளி
வாழ்ந்திடுமே. 5

சிறுமொட்டுப்போல இருகண்கள் மூட
குறுவேர்வைகொட்ட மகரந்தம் போல
முரளீ இசைக்கும் முரளீதரன செந்
திருச்சோதி நெஞ்சில் தினம் வாழ்க, வாழ்க. 6

அழகாரும் ஆதிபாலமூர்த்தி
குழலூதும் கோபகோபிநாதன்
மழைவண்ணன் மதுரபாவம் தன்னில்
துளி எந்தன் வாக்கில் வீழ்ந்து வாழ்க. 7

மதம் விளங்கு மயில்கண் அணிந்தவன்
மதனஜோதி மலர்ந்த முகாம்புயன்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



இடைய மங்கை கடைக்கண் வசப்படும்
நடனநாதன் எந்நாவினில் வாழ்கவே. 8

நல்ல சீருடை நளினத்தாமரையன்ன
கையில் நல்வேய்ங்குழல்
செல்வபாடலபுட்பம் வெட்குறு
சிவந்தபாதச் செந்தாமரை,
மெல்லப்பூத்திடு முல்லைவெண்ணகை
துள்ளியாடு முகாம்புயம்
அல்லிமென்விழி ஆயப்பெண் அணி
குங்குமம் தரிமால்சரண். 9

மதனவேகம் மலர்ந்து பொங்கிட
மகிழ்ச்சி பூத்து மலர்ந்திட
உதயசூரியன் ஒத்தஒண்விழி
உவகை வெள்ளலை வீசிட
இதயஅன்புரஸம் கடைவிழி
புடைபொழிந்திடப்பூரண
மதனஸுந்தரியொத்த கோபிகண்
மாலைபூண்திருமால் சரண். 10

அழகே உருவாகி ஆர்வம் பொங்கும்
குழகன்கோமளன் சியாமளா பிராமன்
இளைஞன் இடைக்குலக்கன்னி இன்பநேசன்
ஒளியாய் என்னுளமென்றும் வாழ்க வாழ்க. 11

சகலபுவனலக்ஷ்மி ஸர்வதா லீலை செய்யும்
கமலமலர்கள் பூத்த காட்டையே தாழ்த்தி நிற்கும்
சரணமடைந்த மாந்தர் சஞ்சலம் தீர்த்து ஆளும்
சரவணபவன் மாமன் செங்கழல்போற்றி போற்றி.
12

அருளெனும் பொருள் சூழ்ந்த
அன்பையே கொட்டிநிற்கும்
மருளுமடியர் துன்பம்
மாற்றியே காத்து நிற்கும்
பிரதிதினம் புதிதாகப்
புதுமையே பூத்துநிற்கும்
விரிகருணை விசாலத்
தாமரைக்கண்ணவாராய். 13

இனிமைக்கலைபொழிசுந்தர
மதனக்கடல் வதனன்
கனிவுக்கடல் உருவாகிய
இளமைக்கலை வடிவன்
கனிமென்னகை நிலவேறிய
பனிமாமதி வதனன்
முனிவர் துதி முரளீதரன்
இதயத்தினில் வாழ்க. 14

கருணைக்கடல் அலைபொங்கிடு
கருமாமணிவிழியன்
திருவோங்கிய இசையோங்கிடு
முரளீதிகழ் அதரன்
இருகாலெனும் பததாமரை
திருவாள் வளர் நிலையம்
உருகும் என துளமென்மலர்
பிரியா நடமிடுக. 15

நித்தியானந்தவடு பிருந்தைவனத்தே பொறிக்கும்
இரத்தினச்சிலம்புமுரல் அச்சுத நின்கால்சரணம். 16

யமுனை நதி இடைவளரும்
கமலமலர்மிசை மருவும்
அமலமணியன மெனவே
முரலும் அரிபரிபுரமே. 17

கருணை எழில் இளமை பொழி
விரிதாமரை நயனன்
முரளீ முரல் குரல் ஈர்த்திடு
முனிமானஸ நளினன்
கமலாகுய கலசம் பொருபெரு
மார்பணிபுளகன்
அதராம்ருதமதுரன் அவன்
விளையாடுவன் மனதில். 18

அன்புடன் ஆயநங்கை
அம்புயக்கண்ணன் கண்ணில்
இன்பமே தோன்ற முத்தம்
ஈந்திடும் போது பாலன்
தன்குழல் ஊதி பாதித்
தாமரைக்கண்கள் மூடிச்
சின்மய பாவம் சொட்டச்
சிரித்திடு ரூபம் போற்றி. 19

கைகளில் கங்கணம் கலகலவென்ன
மைதவழ் இடைஅவிழ் மேகலை மின்ன
மைம்முகில் முடி, மயிலணி இடம் நழுவச்
செய்யவள் புல்கிட அய்யன் எழுந்தான். 20

அன்புசிறந்திட, ஆர்வம் நெகிழ்ந்திட
இன்பம் பிறந்திட இடைச்சியும் பேசத்

தன்னிருலோசனம் மூடி நகைக்கும்
மன்னவன் மாய உறக்கம் புகழ்வாம். 21

பலவித வாசனைப்பூச்சு அணிந்த
சிலையன இடையவர் மகளிர்கள் மார்போ
சலமறு யோகியர்மனம், மதுவனமோ
குலவிடுவான்மால் இவையல திலேயே. 22

சிங்காரச்சங்கீத அமுதம் தெளிக்கும்
மங்காதமணி வேணுஇதழில் இசைக்கும்
சங்கீதக்கோபாலன் சியாமளன் பாலன்
ஓங்காரரூபனைக்காண்பதுவும் என்றோ? 23

தேன்பொழியும் கருணைபொழி
மான்விழியன், மதிவதனன்,
கான்மயிலின் தோகையணி
வான்வண்ணன் அருள்வானோ? 24

கருணைக்கண்ணா, கடல்போல் வண்ணா,
தருணப்பருவா, தயையார் சிறுவா,
அருணக்கழலா, அதரக்குழலா,
வருவாய் கண்முன், வருவாய், வருவாய். 25

யமுனைநதியின் எழிலார் அலைபோல்
குமுதப்பூவின் இதழ்போல், மணிபோல்
நமனைச்செற்ற நாதன் பிறைபோல்
அமுதக்கண்ணால் அருள்வாய் என்றோ? 26

பார்வை குறும்பு, பாஷையில்அன்பு,
நேர்நடை தீரம், குறுநகை மாயம்,
ஆர்வமிகுந்தது ஆலிங்கனம் எனக்
கூறுவர் கோபியர் கோவல பாலா. 27

குறையாக்குறு நகை, குவியாக்கண்மலர்,
சிறுமியரணைந்த சீர்பெறு மார்பகம்,
நிறைநெடுமஞ்சென நீல விலாஸம்
திரிபுவன சுந்தர, காணவும் ஆசை. 28

முரளீமுரல் சுதிபொங்கிடு
மதுராமுத இசையால்
வனஜாமுதக்கருணை ரஸம்
வழிந்தோடு கண் இணையால்
வரதா இனி அருள் நல்குவை
நினைப்பெற்றபின் துயரோ?
முரளீதரன் அருளில், அவன் முனியில்
பிறர் எதற்கோ? 29

கைகூப்பி மெய்சோர்ந்து
கண்ணீர் விட்டழுவேன்!
அய்யா, என்னப்பா, என் அன்னாய்,
என் கண்ணா!
மைமேனி மணிவண்ண
மங்களம் பொங்கும்
செய்யமலர்க்கண்ணமுதால்
திருவருள் புரிவாய். 30

கானன மாமயிற் பீலியணிந்ததும்
கருமை பொருந்தியதும்,
வான்இழிமுகில் எனவளைந்து சுருள்குழல்
வண்ணம் விளங்குவதும்,
ஆனனகாந்தியால் பனிமதி, பங்கயம்
அழகைப்பழிப்பதுவும்,
ஆன உன் இளமையை வளமையைக்கண்டு
களித்திட யான்விழைந்தேன், 31

மூவுலகத்திலும் ஈடிணையற்றது
முகுந்த நின் இளமை எழில்,
யாவரும்கண்டு அறிந்திட அரியது
இறைவ நின் குறும்பு குணம்,
பாவும் மென் நாவும் பின்பாடற்கரியது
பாலக நின் பான்மை,
ஆ, இனி எவ்விதம் வேணுவிளங்குமுன்
மாவதனம் காண்பேன்! 32

அமுதச்சுடர்த்துளி வீசிடும்
அழகே திகழ்ந்திடவே
குமுதக்கடை விழி வீசிடு
அன்பே நிறைந்திடவே
மதனக்கடல் அலை வீசிடு
மதமே சொரிந்திடவே
வசனம் பொழி ரஸிகா
நினை நினைவார் கோபியரே. 33

கண்களை மூடிக்கண்ணனை எண்ணி
நண்ணிய நிஷ்டை நான்புரிபோதில்
வண்ண இசைக்குழல் வாயில் இசைத்துப்
புண்ணியன் முன்வர பூசையும் கெடுமோ? 34

குறும்பு துளிர்த்திடக்
குறுகுறுப்பார்வையில்
அரும்பும் அலைத்திரள்
அன்பு ஜொலித்திட
இருவிழிச்சுடரொளி
மருண்டு விளங்கிட
வரும் கருமணியினைக்
காணவும் ஆசை. 35

செக்கச்சிவந்ததொரு
சின்மயானந்தம்
மிக்கப்பொழிந்திலகு
வேய்ங்குழல் விளங்கும்
மிக்காரும் ஒப்பாரும்
இல்லாத இதழ்தான்
எக்காலும் என்மனதை
இடருறச்செய்யும் 36

இரத்த நாடி, இதய நாடி
துடிதுடிக்கும் போதிலே,
அத்தனை நரம்பும் சோர்ந்து
அகம் தகிக்கும் போதிலே,
மத்தமயிற் பீலிசூடும் மாதவா
உன்முகமதி
சித்ததாபம்தனை அழித்துக்
குளுமை நல்க அருள்புரி, 37

கடைசிக் காலம் கண்கள் இருண்டு
அடியேன் இருளில் ஆழும் போதில்
நடநாயக நின்நாதம் விளங்கும்
வடிவும் முகமும் முன்வரவேண்டும். 38

கடைவிழி அருள் அலை
கால்களில் மின்ன
கடிகமழ் இதழ்க்குழல்
கலைரஸம் துன்ன
வடிவுடை நடை எழில்
வளர் திருவடிகள்
படியினிற்படமுரல்
பரிபுரம் போற்றி. 39

தேவாதிதேவ, உலகேழ்
புரக்கும் தயாளா !
மூவாத நாத, முதல்வா
முகிலே, முராரி !
கோவே, குணாள, குமரா,
குலநாத கண்ணா !
ஆ, ஆ, என் கண்முன் வருநாள்
எதுவோ மணாளா ? 40

கண்ணால் உன்னைக்காணாதுகழி
புண்ணியமில்லாப் புல்லியநாளை
அண்ணலே, அன்பின் தென்றலே, இன்பே,
கண்ணனே எவ்விதம் சகிப்பேன் ஐயோ. 41

யார்க்குரைப்பேன் ? என்ன செய்வேன் ?
யாரிடம் போய் முறையிடுவேன் ?
நீர்க்குவளை நெடுமேனி நித்தியனைச்
சிற்பரனைக்
கார்த்திரளைக்கருமுகிலைக்கண்ணன் எனும்
பசுமணியைப்
பார்த்திடவே பரிதபிக்கும்
ஆசையினால் அலமந்தேன். 42

ஊனக்கண்ணால் உத்தமநாதனை
ஞானக்கண்ணனைக்காண விழைந்தேன்.
யான் என்செய்வேன், என்விதி இப்படி?
மோன குமாரன் முன்னே வாரான். 43

எந்நேரம் இடைவிடாது பொழி
இன் புன்முறுவல்
தன்னாலே மகிழ்வுறும் குழல்
தடையுறாத கீதம்
எந்நேரமும் சுழன்று மருண்டோடும்
இணை மலர்க்கண்கள்
மன்னா ! உன் மதிவதனச்சுவை
மந்தன் என்று காண்பேன் ? 44

நீண்டு, அகன்று, நெடுநீலம்
பூண்டு, சிவந்து, புடைபரந்து
காண்டற்கினிய தண்கண்மலரால்
ஆண்டவ பாலகன் நோக்குவனோ? 45

கரிய குழற்காடு, கானன மயிற்பீலி,
அரியகுறுமுறுவல், அழகார் இதழமுதம்,
மதுரமிருது வதனம், மலையன்ன கம்பீரம்
சதுரமலர்க்கண் சேர்சிசுதனைத் தேடிடுவேன். 46

நீருண்டகார்மேக ஒளிவெல்லும் மேனி
நித்ய யௌவன காந்தி மதம்பொங்குசோபை
சீர்கொண்ட செங்கொண்டை சிறுமயிற்பீலி
சின்மயானந்தமணிச் செங்கமல வதனம்
பேர்கொண்டபங்கயப் பேரருட்பார்வை
பாரெலாம் களிபூக்கும் பனிமலர்நோக்கு
யாராலும் கூறொணா எழில் பிம்பவடிவம்
யார்ஒருவன் இன்பமயம் அவனைத்தேடுவனே. 47

வேதவேதாந்தத்தின் வாக்குகளுக்கெட்டான்
வேண்டிக்கடும் தவம்செய்யும் தவசியர்க்கெட்டான்
போதநிலையறியாத பேதையரின் நடுவே
ஆதரவுடன் வளரும் அற்புதகுணத்தான்
நாதமுடி நின்றதொரு சீதமலர்ப்பாதன்
நல்லவரெலாம்புகழ் வல்ல ஜகன்மோகன்
போதவிழ் கருங்குவளை நீலமலர்க்கண்ணன்
மாதவனை யாதவனைக்காண்பதுவும் என்றோ? 48

லீலாவிலாஸ அலைபாயும்
கோலமதிவதனன்
நாலாபுறம் சுழலும் மென்
நளினமலர்க்கண்ணன்
தோலாத வேணுசுதி சேர்த்துத்
தோகையரையழைக்கும்
பாலாபிராமனைப் பார்ப்பதும்
பணிவதும் என்றோ? 49

வெட்கம் விளங்கு முறுவல்
மதுதோய்ந்த மலர்ந்த அதரம்
எக்குறையுமற்ற பரிபூர்ண
சந்த்ரமலர் வதனம்
உட்பாவம் ஆய்ந்துரஸம் ஆரும்
உத்தம வனப்பு
முக்காலும் என்மனதை விட்டகலாது
முகுந்தன் சிறப்பு. 50

சசிகிரண மதுபொழி மென் இளமுறுவல் வீசக்
கசி கருணை பொழி இனிய கமலவிழி காந்த
இடைய குலமடமகளிர் இனிய இதழ் தோய்ந்த
நடனமணி வதன மலர் மதியழகில் ஆழ்வேன். 51

கரகமலவிரல் தடவு முரளிமுரல் வாணீ
லலித கலை இசை இலகு இதழமுத நீலன்
குறுமுறுவலிள நிலவு சுவைதவழு சோதி
அரிய அரி அதரமணி மதுரமதில் ஆழ்வேன். 52

மதனசரவெயில் சுடவு மமதைமிகு கோபி
மதுகலச தனமுழுத மணியணி மென்மார்பன்
மதமொழுகு மதிகிரண ஒளிபடரு சோதி
வதன ரவி இனிய சுவையமுதழகில் ஆழ்வேன். 53

நீலப்புருவக்கொடியில் வளைவு,
நெடுநேர் இமையில் முடியா நிறைவு,
சீலக்கருணை விழியில் அசைவு,
சிதையா வசனுவளியில் குழைவு,
கோலக்குமுத இதழில் கனிவு,
குழலார் சுதியில் இசையாரமுது,
ஏலக்குழலான் இனிதாம் வடிவான்
பாலன் உருவே நாடும் நயனம். 54

அந்தமிகுந்த அந்த இளமை.
அம்புயச்செவ்வொளி முழுமதி வதனம்.
மந்த ஹாஸ மணிஇதழ் அழகு,
மனதை மயக்கும் மோகன வடிவு,
அந்தக்கருணை அலைபாய் கண்கள்,
ஆரமுதக்கடல் ஆகிய உருவம்,
நந்தன் மைந்தன் தன்னிடமின்றி
உண்மை. உண்மை, உம்பரில் இல்லை. 55

நம்பிய அடியார் எண்ணம் போலே
அம்புவி வம்பரை அக்கணம் மாய்த்து

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



பம்பு மலர்க்கண் கருணை பொழிவான்
அம்புய நாபன் அழகிய பாலன்! 56

பாதம் பங்கயகாந்தி வென்று மிளிரும்;
பதுமாலயத்தாள் விடாள்,
நாதப்பிரும்ம நலந்திகழ் குழல்கரம்
நால்வேதன் சிற்பத்திறன்;
சோதித்திண்புயம் தோகைமார் சுரபியாம்
சொல்லில் சுவை சொட்டுமால்
சிதச்சுந்தர சந்திரானன ஒளிக்
கீடில்லை யார் இச்சிசு? 57

மயிற்பீலி ஒன்றே போதும்
மணிபணியணிகள் வேண்டா
வெயிற்காந்தி நெற்றிப்பொட்டு
விறன்மிகு கஸ்தூரிக்கோலம்.
குயில்வாணி, குழல் சுவைக்கும்
கோமள அதரத்துண்டம்
உயிர்கொள்ளை கொள்ளும் ரூபம்
புதுமை, ஆ, புதுமையம்மா! 58

பாலமயமாகவே மூவுலகும் கண்டேன்
பாலன்புரிலீலையே பத்து திசைகண்டேன்!
கோலசிசு ரூபனைக் கொண்டணைக்கத் தாவினேன்
யாருமில்லைகைகளில்! நேரிலே தெரியுது!
நீலமணி வண்ணனை நெருங்கிடிலோ சூனியம்!
கண்களில் அவன் உரு, கண்ணன் செய்த
ஜாலமோ?
ஞாலமெல்லாம் பாலனே பாலனே ஞாலமே!
ஜாலம் இது ஜாலமே நீல ஆதிமூலமே! 59

கருமென் குழலை
புரள்முன்சுருளை,
அரிய இதழை
அழகுக்கடலைக்
குறுமென் நகையைக்
குறும்புச்செயலைச்
சிறுவன் அரியைப்
பெறுவன் என்றோ? 60

கண்ணா கருமணி வண்ணா! காவாய்!
அண்ணால் என்றே அலறும் போது
தண்ணார் குழலை இடையில் நிறுத்திப்
புண்ணியன் என்குறை கேட்பதும் என்றோ? 61

இளமைமாறு இளைஞன் இனியன்
களைசேர் கருணைபொழி கண்மலரால்
உளமார் துயரை ஒழிக்க நோக்க
எளியேன் எத்துயர் இடையில் காண்பேன்! 62

மதுரம் அதர பிம்பம்,
மங்களம் மந்தகாசம்,
குளுமை அமுத கானம்,
கோமளம் கண்கள் பார்வை,
பெரிய அரிய கண்கள்,
பெய்மழை பேச்சு வார்த்தை.
மரகத மணிநீலப் பாலனைக்
காண்பதென்றோ? 63

மதுரத்தை விடவே மதுரித்தினிக்கும்
சதுரத்தனத்தின் சபலகுணம் சொட்டும்
மதுரைக்கிறைவன் மாமதன்ருதை
அதிசய இளமை எனை ஆண்டதென் செய்வேன். 64

கண்ணும் மார்பும் அகலம் அகலம்,
வெண்ணகை, பேச்சு மிருதுளம் மிருதுளம்,
புண்ணிய இதழ், குழல் மதுரம், மதுரம்,
பண்ணொலி கலைநிதி பார்ப்பதும் என்றே? 65

மதனன் தானே? மதுரம் பொழியும்
விதுமணியோ? வளர் மதுரக்கடலோ?
அதிநய அமுதோ? அற்புத வாக்கோ?
கதியாம் கண்ணன் கண்முன் உதித்தான்! 66

அருள் பொழி பார்வை அவனியை நோக்கக்
குறு நகையமுதம் குலவிதழ் தவழ
மருவிய மயிலிற கணிமுடி முதல்வன்
கருணையம் முகிலைக்காணுவர் புனிதர்! 67

அசைவிழி மலரிணை
இசைபொழி இதழிணை
இசைகொளும் இடைமகன்
ருசியினைப் பொழிகுவன்! 68

அசையும் புயமும் மருள்கண் மலரும்
வழிமென்னகையும் வதனச்சுடரும்
இசையார் அணியும் இறகார் முடியும்
இனிதாம் வடிவும் எழுமே கண்முன்! 69

ஆயர்குலப்பிள்ளை அவைக்கோரணி மகுடம்
ஏயும் இருநீலம் தோயும் மணிக்கண்ணன்

வாயில் நிறை முறுவல் வழிமென் மதிவதனன்
மாயமுகில் வண்ணன் மனதில் நிறைந்திடுவான். 70

அதரபுரி விளங்கும் வேணுகானமுதத்தான்
மதுரைபுரியின் மைந்தன் மாதவன் மணிநிறத்தான்
மதுரப்புனிதக்காதல் மாபுரிக்கேக நாதன்
அமரபுரியில் இல்லாத்தேவன் என் ஜீவநாடி. 71

பூவைப்பூ வண்ணம்,
பொங்கும் எழிற்கண்கள்,
கோவைச்செங்கனிவாய்க்
குறுமுறுவல் வதனம்,
பாவை எனும் முரளி
பஞ்சணையாம் அதரம்,
கோவலனும் பாலன்
கொண்டல் வந்தான் கண்முன்! 72

குறும்புக்கடல், குறுநகை திருவாள்
விரும்பும்கடல், விநோதக்கடல்,
அருமறையோன் தருசிற்பக்கடல், சதுரக்கடல்,
பெருமணங்கமழ் திருலீலைக்கடல், சீலக்கடல்,
திரிபுவன மோகன தெய்வக்கடல், தீரக்கடல்,
சோரக்கடல், சோபைக்கடல்
சுறுசுறுப்புருவாம் செய்கைக்கடல், அதுதான்
நறுமலர் மதுவன பாக்யக்கடலே! 73

சந்திரனை நிந்தைபுரி ஸரஸமுக பிம்பம்,
சுந்தர நல் இசை பெருகு வேணுதவழ் அதரம்,
எந்தனுடை வாணி புரி மெய்த்தவ ஸௌபாக்கியும்
எந்தனரும் புண்யபலன் நந்தன்மகன் வந்தான்! 74

மாடுகள், புவிகள் காக்கும் ஒருவா,
பீடுயர் பெருமான் பெம்மான் எம்மான்
தோடணி ராதை தொடையில் மடியில்
ஆடிய அரவில் துயில்வோய், சரணம்! 75

ஆயமாதர் இணையார் மணிக்குயம்
தோயும் குங்கும மார்ப மாதவா!
பாயும் பண்ணொலி வேணு ஊதுவாய்.
நேயனே நம ஓம் நமோ நம. 76

"ஜல் ஜல ஜல" எனச்சிலம்பொலி கொஞ்சப்
பல்கலை மதுபொழி பங்கயத்தளிர்கள்
மெல்லிய திருவடி புல்கிட பூமி
நல்லிசை ஊதி என்நாயகன் வந்தான்! 77

விலாஸ வேணு ஞான கானம்
விரைந்து செவியிற்பாயவே
கலாமுதக்கடைக்கண் நோக்கு
கருணைவெள்ளம் வீசவே
இலாதவர்க்கும் ஏழையர்க்கும்
இன்பம் நல்கும் என்பரன்
நிலாதவழ் முகம் சிறக்க
நேரில் என்முன் வந்தனன்! 78

குட்டிக்குஞ்சர நடையன், குமரன்
வட்டக்கண்சுடர் வழியும் தயையன்
மட்டில் இசை பொழி முரளீ அதரன்
எட்டி இருந்தெனை நோக்கினன் கிட்டினன். 79

மூவுலகமோகன முளரியந்தளிரால்
ஆவிகொளும் அணிதிகழ் அழகு சுடரொளியால்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



பூவிரிப்புதுமண புதுமை திகழ் லீலே
மேவிய மெல்லடியால் மோகன் வருவானே ! 80

முனிமானஸ வினே போக்கிடும் அவனே இவன்
கனிவாய் இடைமகள் பூந்துகில் கவர்வான் இவன்
பனியார் கருமுகில் வாகன் வீறழிப்பான் இவன்
எனதாருயிர் துயர் தீர்த்திடு பதிதான் அவன். 81

சகலமறிந்த ஸர்வஞ்ஞத்வம்
உலகம் அறியா ஒருசிசு பாவம்
நிகில சராசர நாயக ரூபம்
காணக்காண முக்தியின் சுகமே ! 82

உஷ்ணமிலாது குளிர்ந்து நிறைந்த
க்ருஷ்ணன் முகமதி உதயம் என்றன்
லட்சிய மணிநிறை ஆசையங்கடலே
தட்சணம் பொங்கி வழிந்திடச்செய்யும். 83

செக்கச்சிவந்த மணிச்செங்கமலக்கண்கள்
பக்தர்க்கருள் பொழிமென் பங்கயக்கண்கள்
தித்திக்கும் வேணு இசைத்தேன் பொழி இதழ்கள்
முத்தன் முகத்தாமரஸம் முத்தமிடும் மனமே ! 84

இலேயுதிர்கால இந்துவை வென்ற
இளமை துலங்கு முகம்;
அலேஜலக்கமல அழகினேப்பழிக்கும்
அங்கைச் செங்கமலம்;
விலேயுயர் கற்பகத்துளிர் எழில் நகைக்கும்
விந்தை மலர்க்கழல்கள்;
உலகினில் உவமை இலா உயர் நயனம்
சிசு அமுதம் காணீர் ! 85

கணத்துக்குக்கணமோர் விளையாடல் புரியும்;
மணக்குமலர் நகையால் முனிமனையை மயக்கும் ;
குணக்கரும்புடையான் குதூகலித்து நோக்கும்
வணப்பெரு ஸாம்ராஜ்யம் வல்லவியின் காந்தன்! 86

விளங்கு நவயௌவனம்,
விலையிலாது ஓங்கும் எழில்,
இளங்குழவி தன்மையே
இடைவிடாது பொங்கும் உடல்,
களங்கமில் கலைக்கதிர்
கருணையோங்கு கண்பைங்கடல்,
அலங்கிருத நிலாதவழ்
அமலமந்த காசத்திதழ்,
நலங்கிளர் நன்மெல்லிசை
நடனமாடிடும் வேய்ங்குழல்
கலங்குபவர் கண்மழை
கணம் விலக்கு கானச்சுடர்
அலங்கலணி மார்பகம்,
அகில லோக ஜீவாம்ருதம்,
இலங்கு ஜகமோகனன்
எனது நாயகம் வாழ்கவே! 87

ஆகா ! அபாரம் ! அப்பாதகமலம்,
ஆகா ! அபாரம் ! அந்நயன பதுமம்,
ஆகா ! அபாரம் ! அவ்வதன நளினம்.
ஆகா ! அபாரம் ! அபாரம் ! அபாரம் ! 88

அகில புவன பூஷணம்,
அலர்மேல் வல்லி பூஷணம்,

சகல கோபக்கன்னிமார்கள்
சந்தன மணிமார்பினில்,
அகல இலகும் ஆபரணங்கள்
அசையும் ஆயர்மார்பினில்,
முகிலின் வண்ண மணிமுகப்பு;
முகுந்தன் பாதம் வந்தனம்! 89

மதுரம் மதுராபதியின் உடலம்;
மதுரம் மாயோன் வதனம் மதுரம்;
மதுவே மொழி மெல்லதரச்சுவையோ
மதுரம் மதுரம் மதுரம் மதுரம்! 90

சிருங்காரரஸ ஸ்ருங்காரன்
சிறுபீலி விபூஷணன்
அங்கஜன் தோற்ற ஸௌபாக்யன்
அந்த பாலகனே சரண்! 91

வேதாகமங்கள், வித்சொல்லும் நூல்கள்,
விறன்மா புராணம், வரலாறு,
போதாந்த ஞானம் புகட்டும் பிரஸித்த
புண்யோபநிஷதப் பெருநூல்கள்
ஆதாரமான அரசே உன் தன்மை
அவையாவும் தேடி மிக வாடும்,
நாதாமுதத்து நகை சேர் முகத்தென்
நாதா! கடற்குளுறைவோனே!
கீதாவிலாஸ, கிருபையார் ப்ரகாச,
கிரிதாரி, கஞ்சமலர் நாபா!
பாதாரவிந்த ப்ரபை சேர் சுகந்தப்
பசும்பாரிசாதப் பணியாரும்
வேதாந்த கோஷ வியன் மா பதங்கள்
வினையேற்கு என்று தருவாயோ?

நீதான் என் கண்முன் நடமாடிவந்து
நயனும்ருதத்தைப் பொழிவாயோ? 92

வர்ணனைக்கெட்டாத வதனேந்து காந்தி,
சொற்றொடர்க்கெட்டாத சோபன விலாசம்,
மற்று நான் பற்றிலேன் மாயவ நின் மாயக்
குற்றமில் வனப்பெழில் கண்டு பணிகின்றேன்.
93

வதன ஜோதியைக்கண்டு வெட்கியே
உதய சந்திரன் உடைந்து மாழ்கினன்
பதியுன் பதமலர்ப் பத்து விரல்களைக்
கதியென்றடைந்தனன் நகமதாகியே. 94

சசிப்பிறையும் தாமரையும் சரியாமோ தேவா
ருசிக்கிரணரூபமணிவதன எழிற்குவமை?
வசிப்பன நின் காந்தித்துளிப்பிச்சையவை
கொண்டே
நிசிப்பொழுதுகூம்புவதும் தேய்தல் அவைக்
குண்டே. 95

அகண்ட நிர்வாண சாம்ராஜ்ய வெள்ளம்
புரண்டு பூரித்துப்பொங்கி யெழுந்தார்த்துத்
திரண்டு தெள்ளமுதமாகிக்குளிர் வீசும்
நிறைந்த புன்முறுவல் நீண்டயுகம் வாழ்க! 96

சிருங்கார ரஸம் நுகரும் ரஸிகரோ பிறரோ
மங்காத ஸ்வர்க்கம் விழைமாதவரோ முனியோ
எங்கேனும் அவர்களுடன் வாதம் துதிபுரியேன்
இங்கே உன்னிடமே எழில் எல்லை கண்டேன்.
97

ஆயமகள் ஆயினுமே அழகு ரதியானுர்
கீத இசை நாதமது ஆனதுனதிதழில்
மாயமயக்கொனஷ்டை பல மதுரவிளையாடல்
மாதவனே யாதவனே மாமதுரைநாதா
நாயடியேன் பாடல் அணிநாமதுதிமாலை
நாவலர்கள் வால்மீகி வியாஸர்க்கிணையாக
பூவுலகில் வாழுவது பொருத்தம் அடமாயா
பிறவிதனைப்பெற்றபலன் பெற்ருேம் நினைப் பெற்று. 98

அன்புதரும் அருளுதவும்
தென்புதரும் திருஉதவும்
இன்பம் உயிர் அறிவுதவும்
அன்பன் உனையன்றி இலை. 99

மதுரைமைந்த உன் வைபவத்தில்
மதுர வாக்குகள் விளங்கட்டும்
சதுரா உன் சிசு குறும்பதனில்
சிந்தை நிதமும் திளைக்கட்டும். 100

தன்யர்கள் புண்யர்கள் மணி நாவில்
தாண்டவமாடிடும் சரித மது
பெண்மணி ராதையைத் தோழமை கொள்
பாலப்பருவ விளையாடல்
கண்மணி சுழலக்குழலூதும்
கம்பீராமுதக்கீதச்சுவை
எண்ண எண்ண நிதம் வளர்ந்திடுக
கண்ண என் நெஞ்சில் நின் செயல்கள். 101

அய்யனே உன்னரும் அம்புய பதத்தில்
மெய்யுணர்வழியாத பக்தி உளதாயின்

கைகட்டி வாய்பொத்தி முக்திமுன் நிற்கும்
"செய்வதென்ன" என்றறம் - பொருள்-இன்பம்
கேட்கும். 102

செவி மனம் நயனம் மகிழும் அமுதே
புவி புகழ் புண்ணிய புனிதப் பெயரோய்
எவரும் இணையில் எமதுயிர்ச்சிறுவா
ஜய, ஜய, ஜய, ஜய, ஜய, ஜய, பதியே. 103

ஆனந்த சந்தோஷ ஆவேசக்கடலில்
ஆழ்வார்கள் அணிநெஞ்சில் ஆழும்
ஒருவனுக்கு.
தானந்தமில்லாத தாமரைத்தாளால்
மதுவனத்து மண்தரையைப்பொன்செய்
சிறுவனுக்கு.
ஞானந்தரும் தெய்வநாயக மா நிதியம்
ஞானமறை, வாணிமகள் காண்பரியவனுக்கு
மோனந்த மதுரக்கடல் இனிமை இசையமுதம்
ஞானஒளி ஆனபரன் அவனுக்கு வணக்கம்.
104

பசுபதிசெம்பாதாபரணமணி பக்தன்
சசிவதனக்கண்ணன் புகழ் புஷ்பக்கொத்தில்
ருசிகொண்டு மழலை மொழிகிளிப்பிள்ளை புகலும்
செவியமுதம் ஊழ்ஊழி உலகுண்டான்
மகிழ்க. 105

புவிமிசை வாழும் பெரியவர்யாரும்
போற்றும் சுவைநலம் பயின்றிடுக

கவிமுதல் ரசிகர் நிபுணர்கள் காதில்
காவியச்சுவையமுதூற்றிடுக
அவி என ஐம்புலன் தவக்கனல் பெய்த
ஞானியர், யோகியர், முனிநாதர்
செவியமுதாகும் செங்கண் சிறுவன்
செவியமுதம் புவி வாழ்ந்திடுக. 106

எங்கெங்கு நோக்கினும் என்கண்கள் இறைவனே
செங்கமலக்கண்ணனே செல்வமணி
வண்ணனே
திங்கள்குலச்செம்மலே கடைக்கண்உடன்
குழலிசை
அங்கங்கு தோன்றிட அருள்புரி ஆயனே. 107

முதல் ஆஸ்வாஸம் முடிந்தது.

---

# இரண்டாவது ஆஸ்வாஸம்

புத்தம்புதிய வெண்ணெய் அளைந்த
பூங்குமிழ் அமுதப்புனிதச்செவ்வாய்
சித்தமுவந்து நித்தமருந்தும்
பச்சைப்பசும்பால் ஆடிய குறுவாய்
மெத்தென, வெள்ளென, தண் என மிளிரும்
மேன்மைகொள் செந்தயிர் மேவியசீர்வாய்
இத்தனை பொருளும் இனிதுவிளங்கும்
அத்தன் திருவுரு அருள்மழை பொழிக! 1

மங்களயமுனையின் மருவில் நீர் என
மாடுகள் கண்டு அருந்திடஓடும்,
பொங்கொளி மின்தவழ் புதுமுகில் எனவே
பொன்மயில்கண்டு புரிந்திடுநடனம்;
பைங்கிளிவன்னத்தமாலத்துளிர் எனப்
பொன்னுருக்கோபியர் பறித்திடவிழைவார்;
திங்கட்குலக்கதிர் அங்கக்காந்தி
எங்களை என்றும் மகிழ்ந்து புரக்க. 2

யமுனையின் நடுவில் உடைகள் இழந்து
குமுதமலர்க்கண் கடைவிழிநாணம்
அமுதக்களி துள்ளன்பு மெய்பொழிய
" எமதுடை தா " என எழிலியர் இரக்கும்
இமையவர் நாயகன்
அமைவுடன் காக்க!
உமையவள் சோதரன்
ஊழூழி காக்க! 3

சதுமுகன் நாயகி
சரசுவதி நின்னை
இதுவரை வீணார்
இச்சாண் வளர்க்க
விதிமுறை இன்றி
விற்ருட்டிய பாவம்
அதுநான் துடைப்பேன்
அச்சுதன் புகழால், 4

செந்தளிர் விரல்கள்
ச. ரி. க. ம. பொழிய
மந்தகாச முகம்
மாருதம் முரல
தந்தப்பதுமை எனச்
சப்பணம் இட்டுச்
சுந்தரத் தாமரை
மென்விழி சுழல
பிருந்தாவனமதில்
பிரும்ம இன்னிசை
நந்தா விளக்கென
நாளும் பொழியும்
மந்தாரை திகழ்
மதுமலர்ப்பாதன்
நந்தகுமாரனை
நாளும் நினைவேன். 5

மெல்ல மெல்ல இன்னிசை
முரளி மூலம் ஊதுவான்
நல்ல நல்ல மந்தைகள்
நாளும் காட்டில் ஓட்டுவான்
நல்லர் அல்லாப் பொல்லரை

நாசம் செய்து வீழ்த்துவான்
செல்லக்குழவி பெயரையே
சொல்லு சொல்லு நெஞ்சமே. 6

சுருண்ட கொண்டை முடியின் மேல்
சுழன்று ஆடும் பீலியும்
இருண்ட மேனி ஒளிவிட
இலகுமின் பொன்னுடையும்
உருண்ட பதக்க மார்பினில்
உருளும் துளபந்தனுடன்
திரண்ட பச்சைப்புயங்களாரத்
தெய்வம் என்னைத் தழுவினன். 7

ஆடைகளை அள்ளியவன்
புன்னையில் ஒளிக்க
“ சாடை என்ன பேச் ”
சென்றொரு ஜலஜ முகக்கன்னி
ஆடுமணிப்புருவசைய
அன்புடனே நாணம்
கூடிடவே ஓடி நிழற் —
கண்ணன் கையை ஈர்த்தாள். 8

அடுத்த பிறவியில் ஆவேனோ
அந்த மூங்கிற் போத்தாக ?
மடுக்கரையினில் மணிவண்ணன்
மணிவாய் முரளி தானுக ?
விடுக்குமின்னிசை வேய்ங்குழலாய்
வேறொரு பிறவி எடுப்பேனோ ?
தடுத்து ஆளும் ஆயர் மகன்
தடங்கைக்குழலாய்ப் பிறப்பேனோ ? 9

தலையிற் சுருளும்
    தரளச்சரமும்
விலையில் மணிமே —
    கலையும் கலையும்
குல நீல மகா
    மணிபோல் உருவும்
புலரும் பொழுதே
    நினைவாய் மனமே. 10

மணிவண்ணன் மணிவாயை
    முத்தமிடும் முரளி
அணியாரும் உன்னடியில்
    வீழ்ந்து இரக்கின்றேன்
பணிவாக அவன் உன்னில்
    பண் பாடும்போது
பிணியாரும் என் நிலையைக்
    கூறு அவன் காதில். 11

மேனி நீருண்டமேகம்,
    மேடையோ பாரிசாதக்
கானிழல்; கட்டுமாடை
    கனக வன்னத்துப்பட்டு;
மோனியர் போற்றும் பாதம்;
    முத்தர்கள் நெஞ்சுவீடு;
தானவர் கால காலன்
    ஆனவன் பாதம் போற்றி. 12

பவளச்சீர் கொடி
    பழித்த செவ்வாய்;

நவநவக்கீதம்
நடமிடும் நன்குழல்;
கமலப்பூமுகம்;
கண்டம் சங்கம்;
அமலன் ஆயனை
அடிபணிந்துய்வாம். 13

வாயில் குழலை
வகையுடன் வைத்து
நேயத்துடன் விரல்
மூடித்திறக்க
மாயக்கீத மதுமழை
பொழியும்
ஆயச்சிறுவனை
அகத்துளடைப்பாம். 14

கமல முகத்தில்
கரைந்திடு வெண்ணெய்,
அமல உதட்டில்
அஞ்சாப்பொய் மொழி,
விமல விழிகளில்
வெற்றுக்கண்ணீர்,
நிமல பதத்தில்
நடனம்காணீர்! 15

இவனல்லவோ உலகில்
ஏழையர்கள் பங்காளன்
அவனல்லவோ அன்று
ஆயர்களைக்காக்க

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



யமுனு நதிக்காட்டில்
ஏற்பட்ட தீயைச்
சிவனுண்டஆலமென
விழுங்கினுன் வேந்தன். 16

காசினி போற்றும்
கள்ளக் கார்முகில்
மாசில் சதுமுகன்
துதிபுரி மாயன்
ஆசியளிப்பான்
அழிவைத்தடுப்பான்
வீசிடு நீல மகா
மணிச்சோதியன். 17

வேதங்களின் முடிவுமீது
விளங்கு சோதி
நாதங்கரைகண்டர் நெஞ்சில்
நடிக்கும் ஜோதி
ஏதங்களைக்களையும் தெய்வ
எழில் மிக்க சோதி
பாதங்களில் புரளும்
பால்தரு பாவைமாரின். 18

பச்சைக்குழந்தை பசும் வண்ணப்
பைந்தளிர் மேனி
லச்சை ஒன் றறியாத பருவம்
இலகுபொற்பணிகள்
கச்சை இலா மென் மருங்குல்
கருமேகக்குஞ்சி

இச்சுவைதருமச்சுதன் என்
ஆருயிர் மன்னன். 19

முத்துவளை கைகளில்
கிங்கிணிகள் கால்களில்
சத்தமிடும் நவரத்னப்
பொற்சதங்கை இடையினில்
முத்துசரமேயாடும் நீலக்
கொண்டை உயர் முடியினில்
இத்தரையில் வசுதேவர் பெற்ற தவம்
கானில் காண். 20

பிருந்தாவனத்து மரத்தடியில்
வேதாந்தத்தின் மாமுடியில்
நந்தா விளக்காம் நாயகனை
நாதப்பிரும்மக்காதலனைச்
செந்தாமரைக்கண்ணச்சுதனை
ஜெகமாமோகன உருவானை
எந்தாயாகி எந்தையுமாய்
இலகும் இறைவனை ஏத்துவனே. 21

மடக்கிய பாதம்; மயிலிளந்தோகை,
இடப்புறம் சாய்த்த எழிலார் வதனம்,
கடக்கவொண்ணுக்கரும் காலன் வருங்கால்
நடக்கவென்முன்னே நாரணபாலன். 22

கோபியர்கள் குறைகளைக்
கூக்குரலையடக்கவே
காவியங்கண்ணினுள்
கட்டினள் கயிற்றால்

மேவியவன் வயிறிடை
உலகெலாம் வதியவே
"கோ"வென்று கதறியது
கோவிந்தன் குட்சியே. 23

அஞ்செழுத்தோதி நிற்கும்
ஆதிசைவர் யாமல்ல
கொஞ்சிடும் உமையின் புட்பக்
கொழுந்தெனக் கோலமாடும்
மைஞ்சனைக்கண்டபோதே
மனது யான் பறிகொடுத்தேன்
அஞ்சன வண்ணன் என்னை
ஆட்டியே வைத்தான் அம்மா! 24

கண்ணனைக்கண்டு கருத்துமிழந்தாள்
கலக்கினள் ராதை வெறும் பாண்டம்
அண்ணலும்அவளை அங்ஙனே கண்டு
அவசரமாய்க்கறந்தான் காளை
எண்ணமிரண்டுமிப்படிக்கூடி
ஏறுமாறாக வேலை செயும்
அண்ணலும் கன்னியும் அன்புடன் காக்க
அகில உலகெலாம் ஆதரவாய்! 25

மாட்டுமந்தைப்புழுதி வேய்ந்த
மழைநிறத்துக்குஞ்சி
மாட்டிடையர் கூட்டம் காக்க
மலைக்குடைபிடிகைகள்
பாட்டுக்காடும் பாவைமாரின்
கலவை தோய்ந்த மார்பு
வாட்டமற்ற சந்திரவதன
வாசுதேவன் வாழ்க! 26

பன்றியாய் வந்தபோது
பரமனின் மயிர்க்காலெல்லாம்
சென்றுமே அடைக்கலாற்ருத்
திணறின சாகரங்கள்;
அன்றுதாய் அந்தத்தேவை
அங்கையின் நீரினுலே
நின்று நீராட்டினுளாம்
நித்தமும் மைந்தன் என்று! 27

வேதாந்தத்தை வீணேகுடைவீர்
வேண்டாம், வேண்டாம்
சொல்வன் கேளீர்!
நாதாந்தத்தின் நாயகப்பொருளை
நாமும் காண்போம்
வாரீர், வாரீர்!
யசோதா வீட்டின் கொல்லைக்கட்டில்
நெல்லுக்குத்தும்
உரலில் பாரீர்!
போதாந்தத்தின் பூரணப்பொருளை
புருடோத்தமனை
உரலில் காணீர்! 28

தேவகி மைந்தனைத்
திருவடிபோற்றுவன்
கேவல பூதகி எதிரியை
வாழ்த்துவன்
ஆவலாய் அர்ச்சுன சாரதி
எண்ணுவன் .
நீ வர இயலுமோ
யமனே என்முன்? 29

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



என்கண்முன்னே
　　என்றுமிருக்கப்
பன்மணியணி முகில்
　　வண்ணன் வண்ணம்!
நன்மையிலா இப்பிறவிக்
　　கடலில்
என்மனம் எண்ணுக
　　எண்ணுக கண்ணனை! 30

காதிலாடுமோர் கதம்பக்கொத்து நற்
　　றூது சிந்தியே சிவந்த கன்னமே
நீதியோது நான்மறைக்கு மெட்டிடாச்
　　சாதி நீலமாச்சோதி கண்டனன்! 31

ஆடியோடும் மயிலஞ்சன விழிகள்
　　கூடிக்குவிந்து குழைமணியதரம்
மூடிமூடி விடும் நீண்டமெல்விரல்கள்
　　பாடிடும் பரமபாலன் என் சரண்! 32

கருடக்கொடியாடிடு தேர்தனிலே
　　அருள் தங்கிடுமென்விழிப்பெண்மணியாள்
இருள்ஒப்பதோர் மேனி இளையவனால்
　　திருடப்படுவாள் என்னமாயமிது! 33

பீமா நதியின் கரையோரம்
　　ஆமாம் ஒருவரும் போகாதீர்!
சியாமாங்கன் ஒருமாகாந்தன்
　　ஏமாற்றிஉளம் ஈர்த்திடுவான்! 34

அங்கனை அங்கனை நடுவிலே ஆயர்கோன்
மங்களன் மங்களன் இடையிலோர் பெண்கனி
இங்ஙனம் சூழுமிய இன்பக்கூட்டத்திலே
செங்கனிவாய்க்குழல் சீதரன் ஊதினன். 35

மயிலுடன் அன்னமும் மனங்களித்தாடவே
குயிலுடன் கிளிக்குழாம் கொஞ்சியே பாடவே
துயில் இலாக்கஞ்சனைக்கொன்று நீருக்கிய
மயிலுடைச்சாயலான் மணிக்குழல் ஊதினன். 36

ஓரிடம் வீணையின் ஒலியுடன் பாடுவான்
ஓரிடம் வீணை கிண்கிணியுடன் ஆடுவான்
வேறிடம் வீணை இன்னிசையுடன் கூடுவான்
மாறிமாறிக்குழல் மாயவன் ஊதினன். 37

அழகிய பொற்பணி ஆடியசைந்திட
அழகிய கோபியர் அன்பனும் இன்பனும்
பழகிய இடையர்கள் பக்தியாய் நோக்கிடக்
குழகனும் நடுவிலே குழலினை ஊதினன். 38

மாலைசூழ் வண்டினங்கண்டுமே மாதர்கள்
நீலக்கண் பீதியால் நீலனை நோக்கிடச்
சேலையும் சரிந்திடச் செங்கனி வாயினால்
பாலகர் நாயகன் வேய்ங்குழல் ஊதினன். 39

உருக்கிய பொன்னுரு உருக்மிணி நாயகன்
அருக்கனும் வெள்குவைஜயந்தியும் துலங்கிட
நெருக்கிய மல்லிகை மணங்கமழ் பிருந்தையில்
உருக்கியே மனங்களை ஊதினன் மாதவன். 40

பாலிகைப்பசுமணிக்கரம் எனும் பங்கயம்
. தாளம்போடப் பரன் தண்புரு கூடிட
மாலையார் தோழியர் பாடிட மாலையில்
பாலகோபாலகன் பண்குழல் ஊதினுன். 41

பாரிஜாதங்கமழ் ராதையின் வீட்டிலே
நாரியர் கூடிய நாட்டியக்காட்டிலே
கார்மணியமுனையின் திரைவளர்கரையிலே
கார்முகில் மேனியன் கைக்குழல் ஊதினுன். 42

மைந்தா, பார் அம்மருதமரத்தினை
அந்தமரத்தின் அருகிலோர்பாதை
நந்தன் மனைக்குப்போவதப்பாதை
அந்தவைகுந்தமளிப்பான் வாழிடம். 43

மந்தைப்புழுதியழுந்தியகேசம்
சுந்தரச்சிறுவர் சூழ்ந்திடு தோற்றம்
சந்திவேளையில் ஒவ்வொருவீடாய்
நுழைந்தா கட்டும் நின்மலபோற்றி. 44

அழகுப்பெருநிதி, அற்புதப்பைங்கிளி,
தழைஒளி வெள்ளம், தருமத்துறக்கம்,
விழையாரமுதம், வனிதையர் பேறு,
இழைநன்நிதியம், இறை நல்லோர்க்கே! 45

செங்கை விளங்கிடு சீர்பெறுசாட்டை
தங்கப்பணியணி குண்டலம் மின்ன
பொங்கொளி வதனம் பூத்திடுவியர்வை
மங்களச்சாரதி மணியுரு வாழ்க!

தங்க ரதந்தனில்
தனஞ்சய சாரதி
அங்கு விளங்கும் அழகிய பேர்ஒளி
எங்கும் நிறைந்து இன்பமே பொழிக! 46

அற்புதக்குதிரைகள் அரிப்பைச்சொரிந்து
விற்பெருங்கையினல் விளங்கிடத்தேய்த்து
பொற்கொடிச்சாட்டையைப் பாகையில் செருகி
பற்களில் வாரினைப்பற்றித்திகழும்
கற்பவர் கேட்பவர் காண்பவர் உருகக்
கற்பனைகடந்த கருமணி வண்ணன்
சொற்பதங்கடந்த சுந்தரஜோதி
நிற்பது கண்டென் நினைவுமிழந்தேன். 47

ஆயமடந்தையர் நேயன் மாயன்
அழகிளம் பருவச்சிறுகாளை
தூயநிறத்தொளிர் மாதவன் யாதவன்
சுந்தர முல்லைப்பல்லொளியான்
மாயமணிப்பூவண்ணன் கண்ணன்
முனிமனத்தாமரைச்செங்கதிரோன்
நாயகம் ஆகிய நாரணன் காரணன்
நளினமலர்க்கழல் நினைமனமே. 48

காட்டில் ஒலித்திடு குழகன் அழகன்
கனிவாய் மதுரப்பூங்குழலன்
காட்டில் அலைந்திடு காலன் பாலன்
களித்தரைமகள் புணர்கனைகழலன்
வீட்டையளித்திடு நந்தன் முகுந்தன்
வித்தை விளங்கிடு பைந்நிழலன்
நாட்டினர் பொன்மணி நாயகமாமணி
நாரணத்திருமணித்தாள்சரணம். 49

இன்பன் அன்பன் இனிய முரளீ
இன்னிசைக்கானலோலன்
பொன்பூ வாயிற்பொழியும் அமுதம்
பொங்கியே ஆயர் சேரி
தன்னோர் தன்மைதனை மறந்துமே
தன்மயமாகிநிற்கும்
என் பூ நெஞ்சே இவனதுருவை
எண்ணுவாய் எண்ணுவாயே ! 50

ஆயமடந்தையர் ஆகம் திளைக்கும்
தூயமறைப்பொருட்கெட்டாநிற்கும்
போயிடைமங்கையர் வெண்ணெயைத்திருடும்
நாயகப்பிரும்மத்தையான் சரணடைந்தேன். 51

அசோதைப்பிராட்டி ஆனந்தமெய்த
அத்தனை கோபியரும் ஆழ்காதலெய்த
துவசங்கட்டி மழைபெய்த இந்திரன் நடுங்க
தூயமணிமலர்பெய்து சித்தர்களிப்பெய்த
இவன்வலிமைகண்டிளம் சிறுவர் மனம் குமுற
இச்சிறுவன் பாவம் எனப்பட்டணத்தார் இரங்க
விசையாகமலைதன்னைக் குடைபிடித்துநின்ற
வித்தகனும் அச்சுதன் என் வினையெலாந் தீர்க்க ! 52

கண்டாள் நின்றாள் ஒருகோபி
கண்ணன் வெண்ணெய் திருடுவதை
நன்றாய்ப்போட்டாள் தாழ்ப்பாளை
நாடிநடந்தாள் நந்தகிருகம்

கண்டாள் அங்கோர் கண்ணபிரான்
கட்டுண்டிருந்தான் உரல்தனிலே
கொண்டாள் மயக்கம் புரியாமல்
திண்டாடிநின்ருள் ஒண்டொடியே. 53

உயர்ந்த மணிகள் நிறைந்த தூணில்
தவழ்ந்த பாலன் தன்முகம் கண்டான்
கவிழ்ந்து அதனைக்கையிலெடுக்க
முயன்று தோற்று முகுந்தன் அழுதான். 54

முனிவர்கள் எல்லாம்
முன்னைப்பொருளில்
இனிதுமூழ்கட்டும்
எமக்கது வேண்டாம்
கனிவாய்க்கண்ணன் கதை
எனும் அமுதை
நனி நான் கொண்டேன்
நற்பலன் கண்டேன். 55

தயிரும் பாலும் தலையில் வைத்துத்
தாவி நடந்த கோபியர்
உயிரும் உளமும் கண்ணன் பாலே
உள்ளதாலே நாவினுல்
“ தயிரோ தயிர் ” என்றெனுது
தாமோதரா, மாதவா,
உயிருக்கினிய உலகளந்த
பெருமாள் என்று கூவினுர். 56

கண்ணன் என்னும் மதயானை
கட்டுண்டிருக்கும் முளையெதுகாண்?
வண்ணக்கோபியர் வளர் சேரி,
வரமுனி மாதவர் பெருநெஞ்சம்,

பெண்ணிற்பேர் பேறு யசோதையார்
பெரியதோர் உரலில் பெருமாளைக்
கண்ணுக்கினிய கான் முளையைக்
காணலாம் மூவிடம் வேறில்லை. 57

கால் மலரை ஒருகை மலரால்
வாய்மலர்தன்னில் வைத்திருக்கும்
ஆலந்தளிரில் படுத்திருக்கும்
பாலமுகுந்தனை நினைவேனே. 58

"சம்புவே நல் வரவு, சதுமுகா இப்பக்கம்,
சண்முகா சௌக்கியந்தானு?
அம்பொன்னுட்டரசனே சேமமா?
கொழுநிதிக்குபேர ஏன் காண்பதில்லை"?
கொம்பனை யசோதையார் குழவி
யதுநாதனின் குரல்தூங்கும்போது கேட்டு
அம்புவியில் கனவுகண்டுளறுவான் என்மகன்
என்று கண்ணூறு கழித்தார். 59

"அம்மா, கிண்ணம் தா இப்போ,
கண்ணு, எதற்குப்பாலுண்ண,
"சும்மா தொந்தரை செய்யாதே,
பகலில் பாலே கிடையாது."
"அம்மா, பால் எப்போதுண்டு?"
அசடே, கண்ணு இரவில்தான்
யம்மா, இரவென்றால் என்ன?
மகனே, இருட்டு வந்திட்டால்,
கைம்மாமலரால் கண்மலரைக்
கண்ணன் பொத்திக்கனிவாக

அம்மான் கண்ணர் அசோதையார்
ஆடைத்தலைப்பை மறுகையால்
எம்மான் பற்றி இளங்கண்ணன்
"இரவும் வந்தது, தா கிண்ணம்,
அம்மா, அம்மா" என்றிழுத்த
அந்தக்குழந்தை காப்பாமே! 60

கண்ணு, எந்தன் கருமணியே
காய்ச்சின பாலைக்குடியப்பா
அண்ணு வரும் முன் நீ குடித்தால்
அவனைப்போல் முடி நீண்டிடுமே.
பெண்ணுரமுதார் கூறிடவே
பிள்ளைப்பெருமான் பாதியிலே
அண்ணுந்து தலை கை வைத்தே
"அம்மா, நீண்டதோமுடி" என்ருன். 61

முல்லைச்சிரிப்புடைய
மொட்டன்ன செவ்வாய்ப்
பல்லின் ஒளிகாட்டியே
பாலகன் நகைக்க
எல்லையிலாக்கைலாயம்
இளகு வெண்ணெயாக
தொல்லுலகு முன்னுண்ட
மண்கட்டியாக
செல்வமணிப்பாற்கடலும்
சிறந்த பசும்பாலாய்ச்
செல்வனுடை வயிற்றுக்குள்
கண்டதும் யசோதை,

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



அல்லலுடன், "அய்யய்யோ
 அஜீரணம் கொண்டாய்,
நல்லதடா, மருந்திந்தா,
 நாயகமே," என்ருள். 62

தாய்ப்பால் வாயில் வழிந்திடவே
 தாயின் மடியில் இளம் பாலன்
வாய்ப்பாய் வளர் சிறுவாய் தன்னை
 வகையாய்த்திறந்தான் கோபாலன்
வாய்க்குள் இருக்கும் பால் வழிய
 வண்ணச்சிறுபல்முனைதெரியச்
சாய்க்கும் வதனத்தொளிர் காந்தி
 சஞ்சலமெல்லாம் போக்கிடவே! 63

கனகப்பூவண்ணங்கொண்ட
 கயல்விழிப்பீமன் பெண்ணுர்
அனகனை வேட்ட அன்று
 அளவிலா நாணத்தாலே
தனது மார்பினிலே ஆடும்
 தண்முத்தின் ஆரம் நோக்க
வனமுத்தும் நீலமாகி
 மாயனைக்காட்டக்கண்டார். 64

"அம்மா, அச்சுதன் மண்தின்ருன்
 அங்கே, பார்" என்ருன் பலதேவன்
"இம்மாதிரி நீ செய்தாயா?
 "இல்லை, அண்ணன் பொய்சொல்லி"
சும்மாத்திறடா, வாய் திருடா,"
 சொகுசாய் வாய்திறந்தான் மாயன்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



அம்மா கண்டு மலைத்தாளே
அகிலசராசரம் அதற்குள்ளே. 65

தாரா கணங்களுள்
சுவாதி எனுந்தாரகை
நீரோடு முத்துமணி
ஈன்றதோர் பொருமையால்
காரோடு நீலமணி
காயாம்பூவண்ணமணி
நேராகப்பெற்றனள்
நேரிழையாள் ரோகிணி. 66

ஆனந்தமாகவே அழகு நடமார்ச்சசி
தானந்தருபனை ரத்தினத்தூண்தனில்
தான்கண்ட தாயவள்தன் கையில் வெண்ணெயைத்
தேன்மொழி இரண்டாக்கித்திருமுன்னே
வைத்தனள். 67

பொழுது விடிந்தது
பூமணிவண்ணு
எழுவாய், எழுவாய்
இன்னுயிர்க்கண்ணு
வாழ்வாய், ஊழிகள்
என்று யசோதா
ஆழ்கடல் வண்ணனை
எழுப்புவாள் பள்ளி. 68

பச்சிளம் பாலன் எனப்
பட்சமாய் நாடியே
அச்சுதனைக்கோபியர்
அடிமடியில் வைத்துமே

உச்சிதனைமுகரவே
உலகறிந்த போக்கிரி
இச்சையுடன் தழுவினான்
இடைச்சியர் நாணவே. 69

"வைதேஹி இல்லாது
வாட்டுமே மேகம்
மைதிலியுமில்லாது
எரிக்குதே தென்றல்
மெய்யெலாந்துடிக்குதே
மன்னி எங்கே, தம்பி?"
அய்யனும் முன்பிறவி
ஞாபகத்தில் உளறக்
கை தனை முறித்தந்த
ராதை கனன்றாளே. 70

"பூதனை மாண்டாள் செவ்விதழால்
புல்லினை பட்டன இரட்டைமரம்
வேதனைதரும் உன் நகத்தாலே
வேந்தனிரண்யனைக் கீறினையே
நாதனே நானுனையஞ்சுகிறேன்
நாரண நாடாதே எம்பால்"
மாதர்சிகாமணி உருக்மிணியாள்
மாயனைக்கண்டு நகைத்தாளே. 71

அயோத்தியில் வந்த ராமன்
அங்கனை சீதையோடும்
வயோதிகத்தந்தைசொல்லைக்
காத்திடக்கானடைந்தான்

பயோநிதிவண்ணன் தேவி
 பஞ்சமாவடியில் பாவி
அயோமுக அரக்கன் தூக்க
 அசோகவெஞ்சிறையடைந்தாள்
சயாதிபன் சியாமவண்ணன்
 "சடுதியில், தம்பி, தம்பீ"
தயாநிதி, "வில், வில்" என்றான்
 தாமரைக்கண்ணன் தூங்க
தயாவுடன் ராமன் காதை
 தான் சொன்னயசோதையாரும்
வியாகுலம் கொள்ளச்செய்த
 வில்லியின் சொற்கள் வாழ்க! 72

பச்சைக்குழந்தை நீ
 பாரமலை தூக்குவாய்
பச்சைமணிவண்ணன் நீ
 பேரிருளை நீக்குவாய்
இச்சகத்துள் வீரன் நீ
 இராதைவிழிக்கேங்குவாய்
கச்சணிவோர் கள்வன் நீ
 கருவினையைப் போக்குவாய். 73

நீருண்ட கார்மேகத்திருமேனி
 நிறையுண்ட கிண்கிணி அரைஞாணும்
போருண்ட வெம்புலிப்படையாரம்
 புகழுண்ட புதுவெண்ணெய் அளைவாயும்
சீருண்ட நந்தனின் திருவீட்டில்
 சிறப்புண்டு நடமாடும் சிறியோனே
யாருண்டு நினையன்றி புகல்பூவில்
 யாதவா மாதவா இனியோனே! 74

இடதுகையில் பாயஸம்
இன்பவதனம் இலகிட
வடிவுபெற்ற வலதுகையில்
வெண்ணெய்ப்பந்து துலங்கிட
திடமுடையதிருமார்பில்
தீப்புலிப்படை ஒளிவிட
நடனமாடும் நளினபாதன்
நாரணசிசு வாழ்கவே! 75

கிணு கிணு கிணு வெனும் கிண்கிணிகள்
கண கண கண ஒலி கங்கணங்கள்
டண டண் டண் எனும் தண்டையொலி
தவழுவான் முன்றிலில் சிறுபாலன். 76

மாடுகள் நடுவில் மாயக்கண்ணன்
ஏடவிழ்குஞ்சி, எங்கணும் புழுதி
தேடி நாடியே தொடரும் யசோதையை
ஓடி ஓடியே களைத்திடச்செய்தான். 77

வளைந்த குஞ்சியணிந்த பீலி
வளையணி கோபியர் சூழ் திரு வடிவம்
களைபொழிவதனம், கையில் முரளி,
அளியெனும் விழியுடை அன்பனைப்பணி
வாம். 78

பிரகலாதன் புண்ணியம்
புலவர் புகழ் கண்ணியம்
மறைதேடும் மாப்பொருள்
மணிவண்ணனும் பொருள்
நரசிங்க நாரணன்
நாடுபணிகாரணன்

உரைகடந்தும்பர் துதி
உத்தமனே என் பதி. 79

வஞ்சப்பிரபஞ்சத்தில் வாழ்வாவதென்ன?
கஞ்சனைக்கொன்ற மணிமைஞ்சனடி எண்ணல்
அஞ்சுபேரிருள் நடுவில் அருஞ்சோதியாது?
அஞ்சல் எனும் அஞ்சனக்கருமணியின்
நினைவே. 80

வெண்ணெய், பால், தயிர், திருடன்
விதி தந்த திரு மகிழ்நன்
பெண்ணமுதப்பேரழகன்
பண் மொழியர் பணி புருடன்
எண்ணமதில் வளர் கருடக்
கொடியாடு மணித்தேரன்
கண்ணன் எனும் கனி மதுரம்
உண்ணுவாய் என் மனமே. 81

யாரடா நீ பையனே, பலதேவன் தம்பியான்,
இங்கு நீ எங்கு வந்தாய்?
பேரிருளில் உன் வீட்டை என் வீடென்றே
எண்ணிப்
புகுந்து நான் வந்தேனம்மா!
கார்இருளில் இது சகஜம். கண்டதும் வேறென்று
காட்சி இது என்ன புதுமை?
கூறடா குறும்பனே வெண்ணெயுளஜாடியில்
கொண்டு கை நுழைத்ததேனோ?
"வேறில்லை வனிதையே, வழியிலே தப்பிய
பசுங்கன்றைத்தேடுகின்றேன்"
"ஓர்கணம் பொறுதாயே, வீணிலே வருந்தாதே"
என்ற மணிவண்ணன் வாழி. 82

சேறு படிந்த இடைச்சேரி
சேர்ந்துடன் ஆடுவாய் விளையாடல்
கூறுநான் மறை யந்தணர்கள்
வேள்விச்சாலையில் தலை காட்டாய்
ஆருயிர் ஆ நிரை "மா" என்ருல்
"அம்மா" என்று பதிலுரைப்பாய்
சீரிய யோகிகள், மௌனியர்கள்
செப்புவதொன்றும் செவிசாய்க்காய்
நாரியர் அன்பினை நாடி நிதம்
நற்பல தொண்டுகள் புரிந்திடுவாய்
கோரும் தவசியர் கதறிடினும்
கோவல காவல "ஏன்" என்ருய்
சீருயர் செங்கமலக்கண்ணு
சேவடிச் சுந்தர மணிவண்ணு
யாருனைப் போலுளர் மூவுலகில்
பிரேமை ஒன்றுக்கே பித்தானுர். 83

பூவிலோர் புதுமை கண்டேன்
புகலுவேன் உலகத்தீரே
பூவெனும் கமலம் என்னும்
புது இதழ் மலர்வதென்ருல்
மேவு செங்கதிரோன் வந்து
மெய் கதிர் விரித்தால் ஆகும்
பூ ஒன்று கமலம் உண்டு
அதன் புத்தொளி உண்டு உண்டு
மேவிடும் ஒளி சிறக்கும்
சூரியன் காண்மின் அய்யா
காவியங்கண்ணுள் ராதை
கமலமென் முகத்தைக்கண்டு

பூவைப்பூவண்ணன் என்றும்
புங்கவன் கண்ணன் என்றும்
ஆவியில் இனியன் என்றும்
அனைவரும் சொல்லுகின்ற
சூரியன் சொலிக்கின்றானே
சொல்லுமீதென்ன விந்தை! 84

விஷ்ணு எடுத்துள்ள அவதாரம்
எத்தனையோ இப்புவிமீதில்
கிருஷ்ணன் போல் எப்பிறவியிலே
கோக்கள், கோவலர் முத்திபெற்றார். 85

மேகச்சியாமள வண்ணம் மேனி,
மேகலைக்கிங்கிணியாடு மருங்குல்,
ஆகந்திகழ்ந்திடும் அம்புலிவெம்படை
அணிமணிச்சிலம்பு கொஞ்சிடு பாதம்
நாகக் கருங்குழல் பொன்முடி, பீலி
நல்லிளம் பருவ நாயக சோதி
வேகமாகப்பசு கறக்க விரைவான்
வேணுவிலோலன், வாழ்க என் நாதன். 86

நீருண்ட கார்முகில் நீலமணிமேனி
நீண்டதொரு கைகுடைபிடித்ததோர் மாமலை
சீருண்டவேய்ங்குழல் சிந்துபொற்கீதம்
சேரி வளராய மடமாதர் தனிஅன்பன்
போருண்டபுலிநகம் ஆடுமணிமாலை
பொங்கிளங்கோவலர் போற்று திருவடிவம்
காருண்ட நீள்குழல் கண்கவர் கொண்டை
காந்தமணிக்கோலக்குட்டன் தாள்போற்றி. 87

புன்னகை பூத்துவளர் பூங்குமுதச் செவ்வாய்
புதுநிலவு பொங்கிவிழு பூமணிக்கன்னம்
கன்னல் எனச்சுருண்டிருண்ட கவின்மணிக்குஞ்சி
தயிர், வெண்ணெய், பால் திருடும்
திருவிளையாடல்

அன்னநடை அயிராணி தாலி தழைவீரம்
ஆயிரம் மாற்றுள்ள அபரஞ்சிப்பட்டு;
நந்நிலவில் ஆம்பல் என நின்றொளிருமேனி
சின்னமணிக்கோபாலன் சிவந்தகால்
போற்றி. 88

வேணுவளர் சங்கீதம் விரல் தடவுவேகம்;
விரைசெறியுமலர்க் குஞ்சியசைந்தாடுபீலி;
நாணிலாத்தானவரை நாசம் செயும் வீரம்;
நல்லவரைப்புல்லியணை நலமிகுந்த பண்பு;
மாணுயர் தன்னலங்கருதாத மாட்சி;
மறையவன், மாமகட் கிசைந்துயர் நட்பு;
தாணுபுகழ் கம்பீரத் தழைமுகில் மேனி;
தாமரைக்கண்ணன் மணிவண்ணனடி
போற்றி. 89

பண்பு நிறைந்தொளிர் பச்சைமலை;
பரமப்பிரும்மத்திரு மேனி;
பெண்கனி பாமை மகிழ் கேள்வன;
பேசருமாயையழி தூயன்;
கண்கவர் ஆனந்தக் கட்டழகன்;
கலக்கமிலா தொளிர் கருணைக்கடல்
நண்பர்கள் நாயகம்; நரசிங்கம்
நாரண ராயன் அடிபோற்றி. 90

திருமகள் நாதன், தாமரைப்பாதன்,
தண்கதிர் முகத்தன், தழைமழைநிறத்தன்,
கருணைவளர் கண்ணன், கருமணிவண்ணன்,
வணங்குபவர் லோலன், வசுதேவர் பாலன். 91

யமுனையின் மடுவிலிறங்கிக்
கருநிறப் பாம்பினை வென்ற
அமரகுலாதிபன் ஆயன்
அடியனுக்கருள்க ஆனந்தம். 92

நீண்டிருண்ட குஞ்சிமேல் நிறைந்த மயிற்பீலியும்
ஆண்டகையின் நெற்றிமீது அழகு மான்மதத்திலகமும்
பூண்ட பனையின் ஓலைச்சுருள் புண்ணியனின் காதிலே
நீண்டமணி மூக்கிலாடும் நித்திலத்தின் கொத்துடன்;
காண்டகு வனப்புவாய்ந்த கௌத்துபமணியருகிலே
வேண்டுவன வெலாந்தரும் வியன் மந்தார மாலையும்
தாண்டவமார் விரல்களில் தவழ்ந்திலங்கு வேய்ங்குழல்
பாண்டவர் சகாயன் பட்டுடைப் பச்சை வண்ணன் காக்கவே! 93

முராரி உடையள்ளி விளையாடும் போது
நரகாரி காதலிகள் நதிநடுவில் நின்று
கராரவிந்தமோ கருங்குழலின் மூலமோ
அராமணிக்கண்மூடி ஆடையணிந்தார்கள். 94

கண்ணன் அணி முத்துமணிக் கங்கை
எனும் நீரிலே
பெண்கள் ஒளிக்கண்கள் எனும்
கயல்மீன்கள் புரண்டன;
வண்ண மணி வண்ணனடித் தாமரை மலரிலே
வண்ணமுடனுடுமுன் நெற்றி வண்டாடின. 95
மணிவண்ணன் வாய்முரலும் முரளி ஒலிகேட்டு
அணிவண்ணக் கோபியர்கள் அன்பரை
மறந்து
துணிபோன நிலை மறந்து தொங்கு குழல் மறந்து
பிணிகொண்டு மையல் கொண்டு மெய்
சோர்ந்து நின்றூர். 96

தேவகி தேவியின் வயிற்றிலுதித்து
மூவுலகம் புகழ் நந்தர் தன் மகளைக்
கோவலன் விலையாக் கொடுத்துமே வாங்கிக்
கோவலர் மணியாய்க் கோபியர் உயிராய்
பாவலர் நாவலர் பாடிடுந்தேனுய்
நாவலந்தீவினில் நாவலங்கனி போல்
மேவிடு மேன்மை கொள் மேகவண்ணத்துக்
கோமணி கோமேதகமணி வாழ்க. 97

பலகை மீது பாலகன்
பாலன் தோள் கோபாலன் ஏறி
"கல கல" எனும் மணியின் நாவைக்
கையிற்பிடித்துக்கண்ணனும்
உலகமுண்ட வாயினுலே
உறி தயிர், பால் உறிஞ்சிட
"கலகம் என்ன" என்றூர் கோபி
கடுகி வந்தாள் கண்களில்,

நிலைகுலைந்து ஓடமாயன்
    எச்சிற் பாலைத்துப்பினான். 98

தவம் செய்தோம்; செய்தோம்
    தனமுமளித்தோம் தானம் அதுவாய்
தவத்தோரைப் பேணித்தரணிதனிலே
    தருமம் புரிந்தோம்;
அவக்கேடாம் பூவில் அளவில் புண்யம்
    புரிந்த படியால்
பவக்காட்டைச்சாடும், பகையையழிக்கும்
    பயத்தை விலக்கும்
நவக்காளமேகன் நலந்தருமுயர்
    பக்தி ஒளியால்.
புவிக்குள்ளே உய்ந்தோம்; புலமையடைந்தோம்;
    புருட மணியாம்
சிவன் இன்பன்; அன்பன்; சின்மய பதன்
    சிறுமை ஒழிக்கும்
அவன் அன்பே கொண்டோம்
    ஆரிணை இனி அவனிதனிலே! 99

கண்ண நீ மகிழ்வாயானால்
    பின் குணம் எனக்கெதற்கு?
கண்ண நீ மகிழாவிட்டால்
    பின் குணம் எனக்கெதற்கு?
மண்ணதில் பூவை மார்க்கு
    மகிழ்நன் உறவு, பகைமையாயின்
கண் கவர் வனப்பைக் காட்டக்
    கருது சிங்காரம் ஏனோ? 100

தண்கதிர் ஒளிக்கற்றை
தந்த ஒளி வெல்லும்
கங்கண மணிச்சத்தம்
"கண கணென"த்துள்ளும்
கண்கவர் தயிர் மத்தால்
கனவிரைவாய்ச் சுழலும்
பெண்களந்த மாயவனின்
பெருமைசொலிக்கடைவார். 101

இடச்செவியில் குண்டலம்
இழைந்து ஒளிவீசும்
மடக்கியருள் மணி வாயும்
மெல்ல ஒலி வீசும்
கடைக்கண் விழியருள் நோக்கம்
காதவழி வீசும்
கடைப்புருவக் கொடி மதனன்
கரும்பு வில்லை ஏசும்;
தடவு செந்தளிர் விரல்கள்
சங்கீதம் பேசும்;
நடையழகும் உடையழகும்
காண மின்னல் கூசும்;
இடைவளைந்து, தலைவளைந்து
கால் வளைந்து ஈசன்
கடம்பமலரடி முரளி
கானமிசைத்திடுவான். 102

வில் வேள்வியரங்கத்தில்
வரும் உருவம் கண்டு
மல்லர்கள் இமாலயமாம்
மணிவரையோ என்றும்
அல்ல இவன் அநங்கன் என
அங்கனைமார் கும்பல்
நல்ல சிசு எனப்பெரியர்,
நம்மைப்போலோர் இடையன்
சொல்வதென்ன என இடையர்
செருகு விழிமருளக்
கொல்லவரும் காலன் எனப்
பொல்லாத கஞ்சன்
செல்வன் எங்கள் தேவன் எனச்
செய்தவத்து மேலோர்
எல்லோரும் இவ்வண்ணம்
எண்ணுமண்ணல் காப்பே! 103

மரகதப்பலகையில்
மகிழ்வுடனமர்ந்து
அருகு உறை ருக்மிணியின்
அழகிய முகத்தில்
விரை செறிகத்தூரிப்
பொட்டிட்டு மகிழ்வான்.
நிறை மதி நிலவுமிழ்ந்து
மகிழ் மின்னல்–மேகம்
புருடர்கள், பூவையர்கள்
புகுந்தெங்கும் சூழக்

கருட மாமணிக் கொடியன்,
கண்ணன், மணிவண்ணன்;
அருள் ஜகன் மோகனன்;
அம்பிகையின் அண்ணன்;
இறையவன் யது நாதன்
என்று முனைக்காக்க! 104

அழகு மணி ருக்மிணியின்
அருகுவந்து கண்ணன்
பழமென்று, தளிர் என்று
பச்சை வண்ணன் மருண்டு
வழவழச் சேலையின்
வண்தலைப்பை ஈர்க்க
அழகியந்த அரசியரும்
நாணித்தலைகவிழ்ந்தாள். 105

உலகில் ஒருசிறுமலையை
உருட்டிக்குடை பிடித்தாய்
உலகு உனை கிரிதாரி
எனப்புகழும் கண்ணு!
அலகில் விளையாட்டுடைய
அவன் எந்தன் கணவன்;
தலைவி எனப்புகழாத
தன்மை என்ன, கண்ணு! 106

சந்தியா வந்தனமே
சடுதியிலே போய் வா!
அந்தரத்துளோர்க்கெல்லாம்
நீர்க்கடனும் செய்யேன்.

எந்த ஒருமரத்தடியில்
குளத்தடியில் இருந்து
எந்தை யதுநாதனடி
மென்மலரை யானும்
சிந்தைதனில் எண்ணி எண்ணித்
தீவினையும் தீர்வேன்
இந்த வழிகண்ட பின்னர்,
இன்னலுண்டோ உலகீர்!
சந்ததமும் ஸ்னானம், பூஜை
சலாமுமக்குச் செல்வீர்! 107

இடைத்தலைவன் பாலனே
இன்ப கோபாலனே
என்னைப்பாராய்!
கடைக்கண்ணருள் சீலனே
கருணைவிலோலனே
கவலை தீராய்!
மடக்கஞ்சன் காலனே
மாது திரு லோலனே
மைந்த, வாராய்
தடக்கைபலன் சோதரா
யானைக்கருள் சீதரா
காட்சி தாராய்! 108

வித்தார நெற்றிதனில் கத்தூரி திலகம்
வரையொத்த திருமார்பில் நிறை
கௌத்துபாரம்;

அத்தீர்க்க மூக்குதனில் முத்து மூக்குத்தி
அங்கமலச்செங்கைகளில்
கங்கணம் குலுங்க
மெத்தென்ற சந்தனம் மேனிமுழுதார்ந்து
மேகவண்ணத் திருவுருவம்
மின்னல் ஒளி வீச
முத்தாரமும் கழுத்தில் மின்னிஇடைதுலங்க
மொய்குழலார் நடு மின்னும்
துய்ய மணி வாழ்க! 109

காளிந்தி மா நதியின்
கருநீருந்தயங்க
ஆளேற மாட்டாத
அருவரைகளுருக,
மாளாத பறவை இனம்,
விலங்கினம் மயங்க
நீளுருவ மாடு, கன்று
நீண்ட செவியாட்ட
ஆளான இடையர், இடைச்
சிறுமியர் மெய்ம்மறக்க
தாளம் பொழி ஏழிசையும்
தண்சுவையைக் கொட்ட
கேளாத ஓங்காரம் கேட்டெவரும்
கிறங்க
தாளாத பேரழகன்
வேய்ங்குழலிசைப்பான். 110

இரண்டாம் ஆஸ்வாஸம் முற்றிற்று.

# மூன்றும் ஆஸ்வாஸம்

மூவுலகெலாங்காக்கும் மூலமொன்றுண்டு
முழுமுதல் செந்திருவினழகினையறிந்தே
மூவுலகவா வறுத்த முத்தர்களின் முன்னே
முறுவலுடன் முன் நிற்கும் முதலான
பொருளாய்,
தாவியன்று தளிர்க்கையில் வரையேந்தி நிற்க
தாங்குமலை ஓங்குமரம் நந்தன வனத்தில்
பாவியந்தக் கற்பகக்கா பூக்கள் சிந்த
பாவை எழில் ராதை கண்டு பரவிடவே
சிரிக்கும். 1

ராதையாராதிக்கும் ரஸமார்ந்த பாவம்,
ரமணீய எழில் பொங்கும் ரத்தினச்சுரங்கம்,
சாதாரணங்கடந்த சுந்தரச்சோதி
சாந்தமுறுவில்பூத்த சரச முகமதியான்,
ஜாதி கோமேதகமும் நாணு மெழில் வண்ணம்,
சப்தஸ்வரம் பொழியும் விரல்தடவு முரளி.
ஆதிநாராயணன் அழகார்ந்த சீலன்
ஆனந்த கோபால பாலனடி போற்றி. 2

ஆனைகளெலாம் நாணும்
அழகுநடையுடையான்;
அளவற்ற கருணை பொழி அருமந்த பாலன்;
ஞானிகளின் இதயத்தில்
நாளும் நடமிடுவான்;
நடுவற்ற முடிவற்ற அடியற்ற சோதி
ஆனந்தமாயந்தக் காளிந்தி நீரில்
அநுதினமும் விளையாடும் ஆதி
பரஞ்சோதி;

தானந்தமாய் நிற்குமானந்த மூர்த்தி;
தரும உரு அருமைச்சிசு
தளிரடிகள் போற்றி. 3

அண்ட பகிரண்டங்களத்தனையுங் கூடி
அடக்கிடவே மாட்டாத ஆதிமுதல் சோதி
தன்டையொலி கெண்டை விழி
மாதர் கடைக்கண்கள்
அண்டை பொழி ஆக்கினைக்கு
அடிமை செய்து நிற்கும்;
பண்டை மறையான பொருள்
பால மணி வண்ணன்
வந்தெனது சிந்தையுள்
நிரந்தரம் வாழ்க! 4

மன்மதனை வென்று ஒளிர்
மாமதுர மேனி,
நின்மலமும் நீரஜமும்
சேர்ந்திடு கார் வண்ணம்,
நன்மை மிகு கோபியர்கள்
நலம் சுவைக்கும் பாவம்,
மென்மையுடன் தண்மை பொழி
புன்முறுவற் பூ வாய்,
பன் மணிகள் பூத்தொளிரும்
பசுமிளமைப் பருவம்
மின்னுருவப் பூம்பட்டு,
மாமயிலின் சாயல்,
இன்னதெனக்கூற வொண்ணு
இன்பமணித் தன்மை

அன்னமணியச்சுதனே
அன்பனைப்பணிந்தேன். 5

மானிடனாகி வந்தும்
மகிமையைக்கைவிடாதான்
தேனினுமினிய பாடல்
செய்கையை மறந்திடாதான்
நான் என இளமை தோற்று
யௌவனம் தோன்று தோற்றம்
கான் வளர் சோதியொன்று
கண்டனன் சிந்தையுள்ளே. 6

அகில உலகுயாவும்
அவனிடம் மயங்கிநிற்கும்
சகல கலைகள் வல்ல
சதுரன் செய்லீலை எல்லாம்
கல கல எனும் கானம்
கங்கணம் கிண்கிணி நல்
அகலமுடைய பட்டு,
அதன்மிசை சொன்னக் கட்டு,
நிகில உலகு வாழ
நின் மலன் பாடுகீத
அமுத மழையின் வெள்ளம்,
அன்பு பாய் கண்ணின் துள்ளல்
குமுத நகையின் நீட்டம்
குஞ்சித பாதத்தோட்டம்
நமது மனதிலுள்ளே
நாளுமே நின்று வாழ்க ! 7

நல்லோர் காதில் நாளும் பாயும்
நலமிகு வேணுவின் நற்கீதம்
பொல்லாங்கில்லாப் புண்ணிய கோபியர்
பூரண முகமலர் திகழன்னம்
எல்லாம் வல்ல இறையவன் மறையவன்
என்றே எந்தனிதயத்துள்
சொல்லாலில்லாச் சுதந்திரச்சிற் சுகம்
தந்தேபுகுந்தே வாழ்வானே? 8

ஆசைக்கடல் என்னும் இருள்
அறியாமை தன்னுள்
மோசம் போய் மனதுப்
பிசாசுமே ஆழ்ந்தால்
நேசமிகு கண்ணனுடை
நீல மணிக்கண்கள்
பாச விலங்கறுத் தென்னைப்
பார் தனிலே காக்க. 9

வேதவேதாந்தமுடி
விளங்கு மலர்ப்பாதம்
நாதன் நாராயணனின்
நளின மலர்ப்பாதம்
காதலால் காட்டினிடை
மாட்டெருமைச் சாணம்
பூதி போல் பூசியருள்
வீசிதினம் ஒளிரும்! 10

மெல்ல ஒளிர் முல்லை நகை
வீசு முகமலரும்

நல்லவர்கள் மெல்லிதயக்
கோயிலமர் வடிவும்
பல்லணி சுடர் மாதர்
பண்பு திகழ் வாயும்
அல்லி மலர் நீள்விழியும்
அருள் ஒழுகு முகமும்
பல்லொளியும் பாட்டொலியும்
பாதச்சிலம்பொலியும்
தொல்லை வினையழி மொழியும்
தொங்கு தொடை ஒளியும்
கல்லுருகப் புல்லுருகக்
கரையும் குழல் ஒலியும்
வல்லதொரு வாலிபனை
எந்நாளில் காண்பேன்! 11

பிருந்தாவனக் கோபாலிகை
விழியால் நிதம் பருகும்
செந்தாமரை வதனத்தெழில்
சிங்காரப் பேரொளியை
நந்தாவிளக்கனையான் உயர்
நீர் மாமுகில் ஒப்பான்
எந்தாயினுமினியான் தனை
அந்தோ, என்று காண்பேன்! 12

இடைச்சேரி இன்மொழியர்
பாடுங்கீர்த்தியான்
கடைவாயில் கூடுமிசை
யாடு முரளியான்

நடுவீறிலான் முடிவிலாத
அழகுளான்
இடைச்சாதியான் கமலக்
கண்ணன் தாள் சரண். 13

ஆசை கொண்ட இளம்
ஆயர் மாமகள்
பாசமார் கணவன்
பச்சை மேனியான்
நேசமார் அமுத
சுகுண மாக்கடல்
வீசு தேசுடைய
வீரன் தாள் சரண். 14

தேவாதி தேவர்களும்
தீரர்களும் மற்றை
மூவாத மூவுலக
மூவர்களுமீண்டி
ஓவாது தாள் பணிய
மணிமௌலி மலர்கள்
காவாகக் கொட்டுமணி
வண்ணன் கழல் போற்றி. 15

அயிலேந்து வடிவேலன்
அலகுமணித்தோகை
மயில் கண்டு நடமாடும்
முடிப்பீலி கண்டு,
ஒயிலான தேனுவுடன்
உறவாட வந்து
கயிலாய பதி நந்தி
கண்மூடி மயங்கும்

குயிலான இந்திரனார்
கொம்பன் வெள்ளையானை
அயிராவதம் கண்ணன்
அழகு நடை பயிலும்
வெயில் வந்து நுழையாத
பிருந்தை எனுங்காட்டில்
மயில் வண்ண மதலை இரு
மலரடிகள் போற்றி. 16

கொவ்வைக்கனிவாய், குமிழ் மூரல்,
. கோமள வன்னம், குழை கன்னம்,
செவ்விய பாதம், சிவந்த விரல்,
சமுத்திர நீலத்திருமேனி,
நவ்வியை வென்றநளின விழி;
நல்லவர்க்கருள் பொழி மெல்லிதயம்,
திவ்வியஒளி திகழ் திருவடிவத்
திருமாற் குழந்தையைக்கண்டேனே! 17

பல்லணிகள் பூண்டு ஒளி
வீசுமணி உருவாள்;
நல்ல மயிற் பீலி திகழ்
செல்லக் கொண்டை முடியாள்;
அல்லிமலரழகு பொழி
அருளொழுகு விழியாள்:
முல்லையன்ன பல் வரிசை
மூரல் திகழ் மொழியாள்
நல்லவருமல்லவரும்
நாடிவருங்கழலாள்;

மல்லர்களைத் தோற்கடித்த
மணிவரைத்திண்டோளாள் ;
வல்லமையும் வாக்கழகும்
நோக்கழகுமுடையாள் ;
செல்வ இளங் கண்ணப்பெயர்
பூண்ட திரு வாழி ! 18

மதுரா புரியில்
மணிவீதிதனில்
மதுரக்கடலாய்
வருமோரிளைஞன்
முதிராத இளம்
மான் நோக்கியர் கண்
நுதி மா மழையால்
நனைவான் வாழி. 19

சுழன்று புரண்டு உருண்டிடும்
சுந்தர மணி விழிகளால்,
நயந்து வளைந்து நோக்கிடும்
நளின நீல முகத்தினால்,
பரிந்து பரிந்து பேசிடும்
பச்சைப்பவள வாயினால்,
சுரந்த மிகுந்த அன்பினால்
செல்வன் என் மனங்கவருவான். 20

அன்பு கொண்டு அருள் சுரந்து
ஆனந்தக்களி மிகுந்துமே
இன்பக்கடலில் திணறத்தள்ளி
இளையர் இளமை விழைந்துமே

துன்பம் நீக்கித்துயரம் போக்கும்
    தூர்த்த நாதர் கருவிழி
அம்பு தன்னை அகில மீதில்
    அடியான் யானும் வாழ்த்துவேன். 21
கம்பீர நிலை பூண்டு
    கருணை ஒளிமிகுந்து
அம்பாயிரம் வீசும்
    அல்லி மலர் விழிகள்
செம்பாக ஏழிசையும்
    திரு முரளி மீட்ட
அம்புயக்கண் ராதிகையும்
    அயராது நோக்கும்
செம் பொன்னிறப் பட்டுடையன்
    செழும் பவள வாயன்
அம்பிகையின் முன் பிறந்த
    அண்ணன் மவணிண்ணன்
கொம்பனைய ராதை மகிழ்
    கொண்டல் நிறத்தண்ணல்
தம்புதிய கமல மலர்
    மதிவதனம் கண்டேன். 22
அடைக்கலமென்றடைந்தோரை
    அன்புடனே காக்க
உடைக்கமுடியாத உயர்
    வயிரமணிக்காலன்
இடைக்குலத்தில் வந்துதித்த
    இனியகுணசீலன்
நடையழக நம்பியன்றி
    நானென்றும் வேண்டேன். 23

ஜகன் மோகனுங்கன்
ஜயம்கொண்ட துங்கன்
குகன் கொஞ்சு மாமன்
முகம் வென்ற சோமன்
அகன்ருழ்ந்த அங்கண்ணி
ராதாமணுளன்
அயன்றந்தை வண்ணம்
நிதம் போற்றி, போற்றி. 24

ஏழைபங்காளன் என
ஏழுலகும் பேசும்
தாழைவண்ண ராதை மகிழ்
தாமரைக்கண்ண,
ஏழையுன்றனிணை மலரில்
எண்ணம் வைத்துகந்தேன்
வேழநடைமுகுந்த உன்றன்
இளமையில் மகிழ்ந்தேன். 25

மதுரம் நிறைந்தது,
மனதைக் கவர்வது,
மிருதுள நகைமணி,
நிலவை உமிழ்வது,
திரிபுவனத்திலும்
உவமையிலாதது
அரும் பெருஞ்சோதிக்கடல்
அதிலாழ்வோம். 26

வாயெனும் மலர் சிதறும்
முரளி மகரந்தம்

ஆய்மகளிர் கண் என்னும்
அளிசுழல் செங்கமலம்
தாயினும் தயைமிகுந்த
தழைமழைவண்ண
நீயுன்றன் மதிவதனம்
நேரிலேகாட்டு. 27

சிவந்தகன்று நீண்டிருண்ட
செங்கமலக்கண்களும்
உவந்து உம்பர் போற்றும் திவ்ய
கீத நடனத்தொழில்களும்
சிறந்த சீதக்கதிர்முகத்தில்
உயர்ந்து உருளும் வியர்வையும்
நயந்த நாக நளின நடையும்
உடைய ஒருவன் ஒளிசரண். 28

கையில் ஒரு வேய்ங்குழல்
கண்கவரும் கரி உடல்
வெய்யில் ஒளிப்பட்டுடை
வீர இளம் காளைதான்
தையலர்கள் மையலுடன்
நோக்குமொரு காதலன்
மைவண்ணக்கொண்டை நுனி
மயிலிறகு, மனங்கவர்
துய்யஒளி முகமலர்
துடிப்புடைய வனப்புடன்
செய்யவளும் பசுத்தவளும்
சிந்தை செயும் விந்தையார்

மெய்யுமிழும் மென்னிலவு
மேனியன் ஓர்திருடனை
அய்யன் எனதாண்டவனைத்
தேடுகிறேனனுதினம். 29

பிருந்தை என்றுலகுபோற்றும்
பெரியதோர்காட்டில் வாழும்
சுந்தரத்தேவிமார்காள்!
சொல்லுவேன் நன்மைகேளீர்
அந்தமில் அழகுவாய்ந்த
ஆயர்கோன் மைந்தன் என்னும்
நந்த கோபாலன் ரூபம்
நாளும் நீர் பாரும், பாரும்! 30

தெய்வீகமானதொரு
திவ்யமணிச்சோதி
தையலர்கள் கண்ணிணையைக்
கவரும் கருஞ்சோதி
மெய்யன் ஒருதுய்யன் செயும்
புதியவிளையாடல்
அய்ய என்றன் தவப்பயனால்
கண்டு மகிழ்கின்றேன். 31

பூமியில் வணங்கிவீழ்ந்து
எழுந்து கைகட்டி நின்று
சாமிகள் இந்திரன் சந்திரன்
தேவர் கூட்டத்தைக்கெஞ்சி
நாமிதை வேண்டுகின்றோம்
நாளுமே நந்தபாலன்

சாமளக்கொண்டல் வண்ணக்
கோமளக்குளிர்முகத்தில்
நாமென்றும் பக்திகொள்ள
நல்லதோர்வரமேதாரீர்! 32

வேதநூற் பிராயம் நூறு
விளங்கிடும் பிறவிதன்னில்
பாதியில் பாதியான
கணத்திலாயினுமோர்சீவன்
பூதரம் தூக்கி நின்ற
புண்ணிய நீலமேனிச்
சிதரன் காதையாழ்ந்தால்
வாழ்ந்தவன் அவனேயாவான், 33

இயற்கையில் சிவந்தவாய்
இழைந்து கிருபை வீசுகண்
மயக்கமொழி மதிமுகம்
மையல்தருபுன்னகை
ரசிப்பவர்கள் நெஞ்சிடம்
ரமணியர்கள் அன்பனுய்
ருசிக்குமொருசோதியைத்
துதித்தடிகள் போற்றுவேன். 34

அந்தஒரு செந்தாமரைக்
கண்ணன் உருவும்
நந்தகோகுலப்பெண்கள்
நளினஅடித்துகளும்
எந்தனுடைசிந்தை
மோகாந்தமாயுழலும்
அந்தஒருவேளையிலும்
வந்துதிக்கவேணும். 35

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



மரணம் வந்து என்னுயிர்
வலியக்கவரும் வேளையில்
ரமணிமார்கள் ரமணனும்
ரம்யபாலன்கையிலே
ச-ரி-க-ம பொழி முரளியும்
சங்குச்சக்கர சாரங்கம்
விரையும் நீலஉருவுடன்
சரணமாகவருகவே ! 36

வாக்குகள், மறை, மனம்
கரணாதி
நோக்கு ஐம்புலப்பொறி
நினைவு, மதி,
யாக்கை, உயிர்க்கெலாம் எட்டானும்
எட்டியும்கிட்டஇருப்பானும்
போக்குவரவிலாப்பூரணமாம்
புதியதோர்மருந்தினை அருந்தினனே. 37

ஏழேழ் எச்சன்மம் எடுப்பேனேயாயினும்
இனிதானசெல்வனிறையான யாதவன்
சூழ்குஞ்சிச்செங்கண் சுரர்நாதன் சுந்தரன்
எழிலாய மாதரிருகண்கள் பானகம்
பாழ்காட்டிலாடும் பரமற்கு மோகனன்
பசுவண்ணமேனிப்பசுமேய்க்கும் காதலன்
ஊழ்ஊழிவெள்ளஉரகத்துறங்குவான்
மாசோதிதன்னில் மறைந்தாழ்க என்பொறி.
38

முனிக்குழாம் போற்று மூலாதி மூலன்
முத்தநகை ஆய்மகளிர் முகம்நோக்குதீரன்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



தனக்கென்றுவாழாத பிறர்க்குரியாளன்
தனிமறைகள் நனிதேடும் தாமரைப்பாதன்
கனிவாகக்கடல் மொண்டு கறுத்துடலிருண்டு
கம்பீரமழைபொழியும் கார்முகில் வண்ணன்
முனியாதமுதிராதமுடியாத சோதி
முழுமுதலை அழகமுதை அநுதினமும்
நினைவாம்! 39

சஞ்சலமான இம்மனக்குரங்கு
சண்முகன் மாமனின் ஜலஜ பதம்
தஞ்சமென்றடைந்து உளம்குளிர்ந்து
தாமோதர எம்மாதவனே
கஞ்சமலர்க்கொப்பூழ் அழகா
கருணாநிதியே கலைமதியே
அஞ்சல் என்றருளென்றநுதினமும்
ஆனந்தக்கூக்குரல் போட்டிடுமோ! 40

பாலனாய்ச்சீலனாய்ப்
பச்சைமணிவண்ணனாய்க்
காலனாயரக்கற்குக்
கருங்கண்ணி இடைமாதர்
லோலனாய் லீலனாய்
யசோதையார் பாலனாம்
நீலமாம் சந்திரனை
நான்காண்பதெப்போ? 41

விலாச இளம் லெட்சுமியாள்
விளையாடுவடிவம்
தாசருக்கருள் செல்வத்
தானமிகு உருவம்

நீசர்கள் அடியார்கள்
எனின் அவர் குறைகள்
காசளவும் கருதாத
கம்பீர பாவம்
பாசமறுபுண்ணியர்கள்
பங்கிலுறைசோதி
நேசமிகுநெஞ்சினர்கள்
ஆத்ம–அனுபூதி !
நாசமென்றுமறியாத
நாதப்பிரும்மசோதி
ஈசனெந்தனிதயத்தில்
என்றும் நின்றுவாழ்க ! 42

தெள்ளமுதைப்பழித்திட்ட
திவ்யமுகச்சோதி
ஒள்முத்தைப்பழிவெண்மை
நிலவுபொழியதரம் :
அள்ளுமணிமென்முறுவல்
ஆய்ச்சியர்கள் அன்பன்
ஒள்ளிழை செந்திருவாழும்
உம்பர்ஒளிகண்டேன். 43

ஆனந்த மணிமுறுவல்
அழகுசெய்யதரம்
தானந்தமில்லாது
தயைபொழியுமுருவம்
ஞானமணி இடைமாதர்
உடல்மிளிரும் ஒளியாள்
கானமணிச்செல்வன் எனும்
கண்ணனடிபோற்றி. 44

கத்தூரி மான் திரியும்
    கான்வளருங்கிரியின்
வித்தாரக்கற்ருரை வியன்
    குழம்பு பூசி
மற்ருருமிணையில்லா
    மணிவண்ண மார்பு
நற்ருரகைமின்னும்
    நற்பவளமாச்சு.

பொற்ருமரைவாழும்
    பொன்னியன்னமின்ஞர்
கத்தூரி சந்தனமும்
    கலந்துமணம்வீசும்
வித்தார வில்லனுயர் சொல்லன்
    திருமல்லன்
அத்தாமரைக்கண்ணன்
    அரும்புயங்கள் போற்றி! 45

ஆனந்தக்கருவிழிகள்
    அருள்மழையைச்சொரிய
தானந்த மற்றமணித்
    தாமரை வதனம்
ஞானந்தரும் செல்வ
    நிலவொளியைப்பொழியக்
கான் என்ற பிருந்தைதனில்
    கன்றுகளை மேய்க்கும்
கோன் என்ற கோபாலக்
    குழந்தை என்றன் புகலே! 46

சாரங்கபாணிதனின்
சரசிருகக்கழல்கள்
பாரந்தமானமணிச்
சிலம்புகள்கொஞ்சும்
நீர்வந்த நீரஜத்தில்
நின்று முரல் அன்னக்
கூர்தொண்டைபோல் ஒலிமென்
மலர் போற்று மனிதா. 47

யாதுமற்றதீனர்கட்கு
யாவுமாகி நின்றவன்
போதலர்ந்த கமலச்செங்கண்
பூவைவண்ண மாதவன்
கோதகன்ற கோபிமார்கள்
கொஞ்சும்கோலயாதவன்
மாதவள் பராவு பிரும்ம
மாணிக்கத்தைப்போற்றுவோம். 48

சோதி சூழ்ந்து மின்னுகின்ற
சுந்தரப்பொற்சிலையனுன்
பாதிமலர்ந்து விளங்குகின்ற
பருவம் மிளிரும் பாலகன்
நீதிநெறியன் மாட்டுமந்தை
ஓட்டு நீல மணிமகன்
ஆதியந்தமற்ற ஒருவன்
அழகைப்பாரும், மனிதர்காள்! 49

விசும்பில் வந்து நிற்கும் தேவ
வானமகளிர் வியக்கவும்

பசும்பொன் மேனிக்கோபிமார்கள்
பங்கயக்கண் நோக்கவும்
குசும்பும் குறும்பும் கொட்டுகின்ற
குமுதவிழிகள் சிரிக்கவும்
வசியம் செய்யும் பசியபாலன்
வண்ணம் பாரும் மனிதர்காள்! 50

பாதம் தொடங்கிக்கேசம் முடியப்
பக்தர் நினைத்துத்துதிக்கவும்
காதல் மிகுந்த கோப மகளிர்
கடைக்கண் மாரி பொழியவும்
சாதல் நீக்கி நோதல் போக்கிச்
சக்தியருளும் மாயவன்
ஓதவண்ணன் சீதக்கண்ணன்
ஒளியைப்பாரும் உலகத்தீர்! 51

மதுரை சென்ற மாயன் ஆயன்
மகளிர் மனதில் தோன்றுவான்
மதுரக்கமல மாளிகை மகன்
மகிழுநீல மலர் அவன்
புதிய புதிய வண்ணம் காட்டும்
புளகிதாங்கசியாமளன்
நதியின் கரையில் முரளிஊதும்
நாதன் பாதம் வாழ்கவே! 52

குழந்தைவேலனமர்ந்த மயிலின்
கொஞ்சு தோகைப்பீலியும்
உயர்ந்த மேருகிரியின் தாதுப்
பூச்சின் வண்ணப்பொலிவுடன்

விழைந்துவந்து விசும்பில் நின்று
பொழியும் தேவப்பூமலர்
நிறைந்து குழைந்து வளைந்து விளங்கும்
நிமலன் கற்றைச்சுருள் சரண். 53

மதுர மஞ்சுள
மோகனப்புன்னகை
சதுரக்காதன் மழை
பொழிகண் ஒளி
எதிரில் சூழ் இடைக்
கன்னியர் கண்மகிழ்
மதுரை நாதன்
மலர்முகம் வாழ்கவே! 54

பூத்தலர்ந்த புன்னகைப்
புது நிலவுமிழ் முறுவலும்
பார்த்து நிற்கும் கோபியர்க்குப்
பாசம் சுரக்கும் பார்வையும்
கார்த்திகைப்பிறை நெற்றியும்
கஞ்சம் கெஞ்சு கண்களும்
வேர்த்துநிற்கும் வண்ணமும்
வீரம் விளங்கு கன்னமும்
சேர்த்துக்கோத்தபவளம் போலச்
சிவந்து துடிக்குமதரமும்
பார்க்கப் பார்க்கப் புதுமை கொட்டும்
பச்சை நீல வண்ணமும்
பூத்தலர்ந்து பொய்கைமலர்ந்து
பூரண எழில் சோதியார்

காற்றிலாடும் கமலம் போன்ற
கண்ணன் வதனம் வாழ்கவே! 55

ராதை எனுங்காதலியின்
ரமணீயக்கண்கள்
போதலரும் புண்ணியனின்
புது மணிமார்பு
ஆதரவுடன்னருகில் தூங்கு
செந்திருவாள்
பாதியில் கண்விழித்துப்
பயம் மிகக்கொண்டு
காதலுடன் கங்கணச்
செங்கையால் புல்ல
ஆதிதிருநாரணனின்
அங்கம் புளகிப்பச்
சோதித்திருமணி மார்பு
சுந்தரக்கதம்பம்
மீதியின்றி மொட்டலர்ந்த
வண்ணங் கொண்டதம்மா! 56

மயக்கு மணிப்புன்னகை
மனதையீர்க்குந் தோகைமுடி
வியக்குமலர்க்கண்விழி
வனிதைமார் வணங்கும் பதம்
துயர்க்கரு வழித்திடும்
துகின சந்த்ரன் தோற்கும் முகம்
நயக்கு குழலின்னிசை
நமது நெஞ்சில் வேரூன்றின. 57

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



மலர்வாளி பூட்டும்
மதனும் மகற்கும்
எழில் தந்த எந்தை
எழில்தோற்றம்;
அலர்மேல் ஓர்மங்கை
அனுராகம் செய்யும்
அழியாதபச்சைத்
திருமேனி
குலதெய்வமாகும்;
குகன் மாமனுகும்;
குமையாது தெய்வ
மணம்வீசும்;
பலவண்ணங்காட்டும்
பசுந்தோகைப்பீலி
அசைந்தாடு நீலமணிக்
கொண்டை;
நிலமாமகட்கும்
திருமாமகட்கும்
இடைமாமகட்கும்
பொதுவாகும்;
நிலையற்றபூவில்
நிலைகெட்டுவாடும்
நெறியுற்ற மாந்தர்
புகல் ஆகும்;
விலைபெற்ற காவில்
வியன் வேணு ஊதி
விளையாடி நிற்கும்
பொருளாகும்;
தலையானதெய்வம்
நிலையானசெல்வம்

கலையான கண்ணன்
கழல்காப்பே!

பச்சைப் பசுந்தோகை
உச்சிமுடியாடும்
மெச்சிடும் இனியகலை
எழில்களுக்கெல்லை.
பச்சைமணிரதிதேவி
பதியாகும் மதனன்
இச்சகத்தில் ஈடிலா
எழில்கொண்டதெதனால்?
அச்சுதச்சிறுவனின்
அழகில் ஒரு திவலை
பச்சைக்கிளி வாகனப்
பாலன் பெற்றதனால்!
அச்சுவைதரும் தெய்வ
அழகுக்கடல் கண்ணன்
நச்சரவில் நடி பாதன்
நாடோறும் வாழ்க!

58

நீண்டகன்ற கண்களும்
நீலப்பச்சை மேனியும்
தாண்டவமார் பாதமும்
தண்டைகொஞ்சு கழல்களும்
ஆண்டகையின் ஆண்மையார்
அன்புபொங்குபார்வையும்
மாண்டமதிவதனமும்
வதனம் வாழுந்திலகமும்
பூண்டமணிப்பூண்களும்
பூரணஎழிற்காந்தியும்

காண்டகு நற்கரங்களும்
கரத்திலாடுமுரளியும்
ஆண்டவனைரசித்து மகிழும்
அன்பர் பரவு நற்சுவை
பூண்டுநிற்கும் புத்தமுதம்
வாழ்க, வாழ்க, வாழ்கவே!! 59

பட்டணம் இல்லை, பாசறைவீடு;
பத்தினி இல்லை, பால்மகள் மனைவி;
சிட்டர்கள் இல்லை, சேரியர் தோழர்;
சீரும் சிறப்பும் பேரும் பெற்ற
பட்டணத்தாராம் பிரஜைகள் இல்லை,
கப்பம்கட்டும் அரசரும்இல்லை,
வெட்டவெளிச்சக்காடே வீடு,
வீழ்ந்த குன்றிமணி, பீலியே நகையாம்
முட்டத்துறந்த மோனியர் பணியாள்;
சந்தனமில்லை, மலைப்பொடி பூச்சு,
அட்டதிக்குகள், ஆனை குதிரையாம்
ஆநிரையோட்டு குறுந்தடி செங்கோல்,
தொட்டு ஊதுவான் கொம்பும் குழலும்
தோன்றியவாறு சேட்டைகள் செய்வான்
இத்தனை லட்சணமுடைய இடையனை
இப்புவிநாதன் என்றேத்துதல் தகுமா? 60

உயர்ந்த மாமயிற் பீலியணிந்து
உருண்டு திரண்ட மேகம்போன்று
நிறைந்த வனப்புமிளமையுங்கொண்டு
நித்தியம் செந்திருசித்தம் கவர்ந்து
மலர்ந்த மணங்கமழ் மாணிக்கமாகி
மனதைக்கவருங்கள்வனுமாகி

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



வியந்தகோபியர் அன்பனுமான
வீரனுக்குள்ள முருகாதார் யார்? 61

செக்கச் சிவந்த சிறு உதடு,
சஞ்சலக்கருவிழி உருள் நயனம்,
மிக்கக் களிப்புடன் மின்னுவது
எக்களிக்கச் செயுமெழில் சோதி
மொக்கெனப்பல் விரி முறுவலொளி
முழுநில வெரியருள் மோகம்செயும்
சக்கரக்கையன் முகமதியை
சர்வகாலமும் நினைமனனே!! 62

விழித்தெழு, விழித்தெழு மனமே,
சுழித்தெழு கங்கை இன் நீர் போல்
அழித்திட வந்ததுன் தாபம்
தழைக்குலமழை முகில் செல்வம்! 63

கால்கள் சிவந்தன,
குழல்களிருண்டன,
மால்விழியருள்வன,
மலர் எனப் பெரியன,
ஆலந்தளிர் என
மேனிபசுப்பன,
கோலமழகிய
பாலனுமாவன,
கொண்டலுமின்னலும்
கொண்டுசிறப்பன;
நீலநிறத்தன,
நீள் நெடு வடிவின,
சீல நிறைந்தன;
செய்கை உயர்ந்தன,

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



பாலப்பருவத்துப்
    பான்மைகள் நிறைந்தன
மால் எனும் மணி உமிழ்
    சோதிகள் பணிவேன். 64

மாலேவேய்ந்த கொண்டையாள்
    மலர்கள் கொஞ்சு வடிவினள்
காலேக்கதிர்போல் நுதலிலே
    கமழும்கிரியின் பொடியினள்
லீலேகொஞ்சு செய்கையாள்;
    லலித வேணுவாயினள்;
வேலேப்போன்ற விழியினள்
    வனப்பு உமிழும் மேனியாள்
நீலமார்ந்த நிறத்தினள்
    நின்மலமணித்திறத்தினள்
பாலசந்த்ரன் மரபினள்
    பால்பழிதிரு மொழியினள்
ஞாலம் சூழ்ந்த கீர்த்தியாள்
    நாநிலம் புகழ் சீர்த்தியாள்
கோலக்கண்ணப்பெயரினள்
    குழந்தைதேவதை போற்றுவோம். 65

மென்மை வாழும் பதத்திலே
    மெருகு வாழும் புறத்திலே
தன்மை வாழும் தொடையிலே
    தைரியம் வாழும் நடையிலே
வன்மை வாழும் தோளிலே
    வண்மை வாழும் கையிலே

நன்மைவாழும் மொழியிலே
நளினம் வாழும் விழியிலே
தொன்மை வாழும் மரபிலே
தோற்றம் வாழும் அருளிலே
பன்மை வாழும் கொடையிலே
பரிவு வாழும் கடையிலே
இன்மைவாழும் இடையிலே
இன்பம் வாழும் அடியிலே
சன்மம் வாழும் காட்சியில்
சீதரன் திரு மாட்சியில்! 66

வளர, வளர வாலிபம்
பொழியப் பொழியக் குழலிசை
தளரத் தளர நம் மனம்
தணியத் தணிய வினை இருள்
மலர மலர அருள்விழி
மடிய மடிய இருட்குழி
அருள அருளப்பார்த்திடும்
அரியைச் சிந்தி நெஞ்சமே! 67

பீலி கொஞ்சும் திருமுடி,
பீடுகொஞ்சுமருள் மொழி,
காலிகொஞ்சுமிடைமகன்,
கருணை கொஞ்சுந் திருவிழி,
ஏலம் கொஞ்சும் வார் குழல்,
இனிமைகொஞ்சு மணிஎழில்,
நீலங்கொஞ்சு நீள் உரு,
நிதியம் கொஞ்சுமிருபதம்,

மூலங்கொஞ்சு முழுமுதல்,
முக்திகொஞ்சு மலரடி,
கோலம் கொஞ்சு குளிர் மழை,
குன்றுகொஞ்சு செங்கரம்,
பாலர்கொஞ்சுவேலைகள்,
பக்தர் கொஞ்சும் லீலைகள்,
சீலம் கொஞ்சும் மாமகன்
திறமை கொஞ்சென் நெஞ்சமே! 68

சரளமும் சரஸமும்
பொழியும் முகமதி,
மிருதுளமும் மதுரமும்
பொழியும் நகை ஒளி,
கருணையும் காதலும்
பொழியும் கடைவிழி
அருளையும் பொருளையும்
அருகிற்கண்டேன். 69

ஆசைகொண்ட கோபியர்
அல்லும் பகலும் வணங்கிடும்
ஆசையற்றயோகியர்
அனுதினமும் பரவிடும்
நேசமுற்றதாமரை
நித்தம் கண்டு வெட்கிடும்
பாசமறுக்கும் மலரடிக்குப்
பச்சை வண்ண வந்தனம்! 70

இடையமாதர் அன்பினுல்
இன்பஉவகை பொங்கினுல்

இடை இடையே தழுதழுத்து
இனியமொழியில் பேசினால்
கடைவிழியின் பண்பினால்
காதுகுளிரப் பருகிடும்
இடையனான இளைஞனே
எனது மடமை போக்கிடாய்! 71

காதல் கனிந்திடு நோக்கும்
கையிலோர் முரளியும் கொண்டு
சாதல் தவிர்த்திடு மேகன்
சண்முகநாதனின் மாமன்
போதம் விளங்கிடுமுதிராப்
பிறையென நிலவொளி உமிழும்
சிதரன் கருணைக்கண்ணனையைச்
சிந்தைஉவந்திடுவேனே! 72

பசுக்கள் மேய்க்கும் கலைபயின்று
பச்சைத்தோகை சூடியே
வசுக்கள் கண்டு பிரமித்து நிற்க
வாயிற்குழலை ஊதியே
சிசுக்கள் சூழத்தலைமை வகித்துச்
சிந்தாமணியாய் நின்றிடும்
பசுத்தமேனிப்பாலன் வண்ணம்
எண்ணிநித்தமேத்துவேன்! 73

புன்னகை பூத்துச் சிவந்த இதழ்
பூரண இன்னிசை பொங்குகுழல்
நன்னயக்காதல் கனி நயனம்
நாளும் மதம்பொழிகடைக்கண் விழி

அன்னை கமலை வளர் அகன்மார்பு
அனைவரும் போற்றிடுமருள் வடிவம்
சொன்ன நகர்துறந்து பூமிவரும்
சின்மயநாதனைப் போற்றுதுமே! 74

கண்மலர் காமதேனு,
இருதயம் கருணையாறு,
பண்ஒளிர் பாதபுட்பம்
பரவுவார் பதுமநிதியம்,
பெண்மலர்க்கொடிகள் கொஞ்சு
பெருமைசேர்வதனமதியக்
கண்ணனை எண்ணு நெஞ்சே
கவலைகள் சாம்பராகும். 75

மற்றச்சுவைகளை வீழ்த்திவிடும்
மதுரைமைந்தன் ஒருசுவையே
கற்றவர் கேட்டவர் காதலிக்கும்
கண்ணன் என்னும் கைவல்யம்
பெற்றவர் போற்றுவர் பேரின்பம்
பெறுதவர் நாடிடு வீட்டின்பம்
மற்றிதுபோலிலை மனிதர்களா!
மனிதத்தெய்வம் வணங்கிடுவீர்! 76

வானமா மகளிர்
வந்துசூழ்ந்திடக்
கானமாமழையைக்
காட்டில் பெய்திடும்
ஞானவாரிதியுமான
மாமுகில்

கோன்எனும் குமரக்
கண்ணன்தாள் சரண். 77

வேகவேணுஇசை
காதில்பாய்ந்திட
நாகவேணி புரண்டோட
நாதனைத்
தாகம்தீரத்தினம்
தழுவுபெண்கள்சூழ்
வேகநீர் யமுனைக்
கரையைப்போற்றுவோம்! 78

மானனநோக்கியர்
மயிலன்ன சாயலர்
தேனனமொழியினர்
திருமணிப்பாவையர்
யான்எனதற்றதோர்
இரண்டிலாத்தன்மையர்
கோனினைச்சூழுவர்
கொண்டல்சூழ்மின்னினர்
வானமுதன்னதோர்
வள்ளல்கண்மலரிணைத்
தேன்சொரிநோக்கினல்
தேவர்கோன்மருளவும்
மீன்கொடித்தேரினன்
மகிழ்ச்சியுள் மூழ்கவும்
ஞானமார் கண்ணனும்
நோக்குவான் காக்கவே! 79

யமுனை நதியின் கரையிலே
புன்னை மரத்தின் அடியிலே
குமுதக்கனிவாய் மாயவன்
கொம்பை இடையில் செருகியே
அமுதக்கீதமுரளியை
அய்யன் இடது கரத்திலே
தமது கரத்தை இடுப்பிலே
தாங்கி நின்று ஆயவன்
நமது விழிகள் குளிரவே
நளினமலரின் இலையிலே
நிமிடத்துக்கே இமைகள் கொட்டி
மாடு, கன்றை நோக்கியே
தமது அன்னை தந்ததோர்
தயிரின் சோற்றைவாரியே
அமைவுடனே புசித்திடும்
அழகுபாலன் வாழ்கவே! 80

ஆயமா மடந்தையர்க்கு
மான்மதத்திலகம்போலும்
தூயருக்மிணியார் கண்ட
நீலமாணிக்கம் போலும்
காயுமாயோகியர்க்குக்
கருவிழிமையேபோலும்
நேயமார் வண்ணங்காட்டும்
நீலமார் கோலம் வர்ழ்க! 81

நீலோற்பல சியாமளம்
இந்து முகமே,

மேலாடுமயிற்பீலி
தான் நாடு முடியே,
மேலானமரு, மணிகள்
சீராடு மார்பே
வேலான விழிக்கோபிக்
குழுசூழும் வடிவே,
சேலான கண்ணணியர்கள்
நீல விழிப்பார்வை
மாலானமாலையணி
மங்களத்தோற்றம்
பாலாழிபள்ளிகொளும்
பாலன் கையில் முரளி
நாலான மறைதேடும்
நாதன் வண்ணம் போற்றி! 82

நீலமணிக்கருங்கண்ணணிக்
கோலமணிப்பார்வை
ஆலமரும்பாலனடி
அர்ச்சனைக்கு மலர்கள்,
மாலவனின் தொப்புள் உறை
மணிக்குளத்தில் மீன்கள்,
நீலமணி மார்பதனில்
மலர்வாளி ஐந்து,
சீலமுள திருக்கழுத்தில்
நீலமணிமாலை,
வேலவனின் மாமன்முகத்
தாமரைசூழ்வண்டு,
நீலமுகிற்கொண்டைநுனி
கோலமயிற்பீலி,

ஞாலம் வெல்லும் கோபியர்கள்
நோக்கமுனைக்காக்க! 83

காலைவேளையில் ஆயமகளிர்கள்
கடைவார் தயிரை அதிவிரைவாய்
நூலைப்போல் திகழ்நுண்ணிடையாய்ச்சியர்
கோலாகலம் நிறை கோகுலமே.
மாலையாடிடும் மாமகள் மார்பன்
மணிவண்ணன் குளிர் மலர்க்கண்ணன்
காலைத்தூக்கியே சத்தமிடாமல்
கடைவார்பின்னேவருவானும்
நீலவாயினால் கோலவிளக்கை
நின்றுஊதியே அணைப்பானும்
சீலக்கோதையர் திடுக்கிடுமுன்னே
வெண்ணெயை விழுங்கிச் சிரிப்பானும். 84

தயிரைக்கடையும் அரவம் கேட்டுத்
தாமரைக்கண்ணன் விழிப்பானும்.
மயிரும் புரள மாலை குலுங்க
மலர்க்கண்களைத்திறப்பானும்.
உயிரும், உளமும், உணர்வும் ஆன
உத்தமன் பாலரத்தினமாம்
தயிரைக்கடைவார் வெண்ணெய் திருடும்
தளர் நடைமைந்தன் காப்பாமே! 85

சிவந்த மலரைச்
செவியிலணிந்து
சிறந்த நான்மறை
தேடமறைந்து

உவந்துகோபியர்
குழல் மலர் சூட்டும்
நிறைந்த பாலனை
நெஞ்சில் நினைவேன். 86

வெண்ணெய்த் திருட்டைக்கூறினால்
திருட்டுப்பாவம் பறக்குமால்
பெண்ணின் திருட்டைக்கூறினால்
பெரியபாவம் மறையுமால்
அண்ணல் அரக்கர் போரைக்கூறின்
கொலைசெய் பாவம் தொலையுமாம்
பெண்ணரக்கி பானம் சொல்லின்
கள்ளுண் பாவம் தொலையுமாம்
எண்ண எண்ண இந்நிலத்தில்
எவ்வகைப்பாவமும் அழியுமால்
கண்ணன் என்றும் கரியன் என்றும்
கமலைகேள்வன் என்றும் நீர்
வெண்ணெய் திருடும் கள்வன் என்றும்
வேதமுதல்வன் என்றுமே
உண்மையாக அவனை எண்ணில்
உலர்ந்து தீயும் பாவங்கள். 87

மாரா நீ வாராதே
மாருதே என் நெஞ்சம்
காரார் மேனிக்கண்ணன்
நேராய் வாழ் என் நெஞ்சம்.
ஏ ராதா மணவாளா,
பாராயோ நீ தஞ்சம்?

கூருயோ உன்வீட்டில்
வேரூள் வந்துட்கார்ந்தால்! 88

வளைந்தமேனி;
சிவந்த சிறுகை
தவழ்ந்த பாதம்
தரையில் விளங்க
அளைந்தவெண்ணெய்த்
தாழியும் ஓர்கை
அணைந்து நோக்கும்
அற்புதன் வாழி! 89

மந்தார மரத்தடியிலே
மதனன் தோற்கு வடிவமே
செந்தாமரை விரலிலே
சிறந்துமுரலும் முரளியே
செந்தாழையன்ன கோபியர்,
சிறுவர், ஆயர், மாடுகள்
எந்தாய் என்று சூழ்ந்திடும்
நந்தா விளக்கும் வாழ்கவே! 90

செந்தாமரைக்கால்களாலும்
சிவந்தபிஞ்சுக்கரங்களாலும்
அந்தாமரைமுகம் விளங்க
அழகு குண்டலம் சொலிக்கவே
சிந்தாமணியும் தருவும் வெட்க
சின்மய அருள் பொழிந்துமே
கொந்தார் கொண்டை அசையத்தவழும்
கோலக்குழந்தை தாள் சரண்! 91

கோதண்ட பாணத்தைக்
கீழே வையப்பா!
மூதண்ட மயங்குமிசை
முரளி கையிலெடுப்பாய்.
மா தண்ட நாயகனே
மயிற்பீலி சூடு
ஓ தண்ட பாணி புகழ்
ரகுராமச் சந்த்ரா! 92

பாற்கடல் நாதன் என்றும்
பசுக்கள் மேய் பாலன் என்றும்
பார்க்குளே பாலருந்தும்
வேட்கையால் வேணு நாதன்
சீர்ப்பதம் தன்னை நாடிச்
சிந்தையால்வேண்டி நின்றேன்
யார்க்கு நானுரைப்பேன் விந்தை
எனக்கு ஓர்பொட்டுத் தாய்ப்பால்
பார்த்திடாமற் செய்திட்டான்
பால கோபாலக்கண்ணன்! 93

கையைத்தான் உதறிக்கொண்டு
கண்ணனே போனாய் நீயும்
பைய என்னுளத்தைவிட்டுப்
பசுமணிவண்ணன் என்னும்
பையலே போவாயானால்
பகருவேன் உன்றன் வீரம்!
அய்யனே அன்று தான் நீ
ஆண்மகன் ஆவாய் கண்டாய்! 94

இருளினில் தவிர்ப்பார்க்கெல்லாம்
இரவியின் பிம்பம் போன்றும்
இருங்கடல் ஆழ்வார்க்கெல்லாம்
இணையிலாத் தெப்பம் போன்றும்
பெருந்தாகமடைந்தார்க்கெல்லாம்
பெய்திடு மேகம்போன்றும்
பொருளிலா வறியர்க்கெல்லாம்
பூரண நிதியம் போன்றும்
பெருநோயில் துடிப்பார்க்கெல்லாம்
பெருமருத்துவரேபோன்றும்
மருளினில் மடிவாருக்கும்
மனம் நொந்து இடிவாருக்கும்
தெருளின்றித் திகைப்பாருக்கும்
தெம்பின்றித் திணறுவார்க்கும்
அருள் தர வந்தானய்யன்
ஆயர்கள் வேந்தன் துய்யன். 95

இனிக்கின்ற வில்லும் பூண்டு
இனியபூ வாளி பூண்டு
பனிக்குன்றமனைய சங்கும்
ஆழியுங்கதையும் பூண்டு
நுனிக்குஞ்சம் கட்டியாடும்
நுண்கலை வேணு, பாசம்,
தனக்கென்றுமுவமையில்லாத்
தாமரை, குலிசம் பூண்டு
நனைக்கின்ற மேகம்போன்ற
மேனி செம்பட்டுப்பூண்டு
மணக்கு குங்குமமே தோன்றும்
மணிக்கொடி வண்ணம் பூண்டு

இணைக்கரக்கருப்பு வில்லோன்
எழில்பழி தோற்றம்பூண்டு
அணைக்கு மாமகள், ஆய்மாதர்,
ஆயிரங்கோடிசூழ
அனைத்துலகாண்டு காக்கும்
அற்புத மணியே போற்றி. 96

வசந்தமார் காலந்தன்னில்
வாசனைவீசும் பூக்கள்
பசந்ததோர் மேனித்தென்றல்
பரிமளித்தெங்கும் வீச
சசந்தவழ்மேனித் திங்கள்
தண்ணிலாக்கொப்புளிக்க
வசமிழந்தாய மாதர்,
வான மாமகளிர், நாகர்,
திசைபுகழ் அட்டபாலர்,
தேவர்கள், முனிவர், மக்கள்
அசதிகொண்டயர்ந்து நிற்க
அத்தனைபேரும் வெட்க
விசையுடன் முரளிஊதி
விண்ணவர்பண்ணில் சொக்க
ரசமுடன் ராஸமாடும்
ராஜகோபாலன் வாழ்க! 97

பாலனாய்ப் பரமனாய்
பச்சைமணிவண்ணனாய்
நீலனாய் நன்மணிகள் கொஞ்சு
மணி இடையனாய்

சீலனாய்ச் செங்கமலக்
கண்ண மணிவண்ணனாய்
லோலனாய்ச் சகலகலை
லீலனாய் வனமாலை
மாலனாய் மால்தரும்
மாயனாய் ஆயனாய்
காலனாய்ச் சகடற்கும்
கூற்றனாய்ப் பூதனைக்கும்
ஏலவார் குழலனாய்
இளைஞனாயழகனாய்
மூலமாய் மூர்த்தியாய்
மூவர்க்கு முதல்வனாய்
ஞாலமார் பொருளுமாய்
ஞானமாய் மோனமாய்
கோலமாய்க் கொண்டலாய்
கொண்டைமுடி குழகனாய்
வேலுலாங்கைக் குமரன்
மாமனாய்க் காமனார்
கால்வணங்கு கழலனாய்க்
கடவுளாய்க் கதியுமாய்
ஆலமாந்தளிர் துயிலும்
அய்யனாய் மெய்யனாய்
பாலகோபாலனாய்ப்
பாலகியர் தோழனாய்
நீல மாணிக்கமாய்
நிறைபவனைப் போற்றுவாம். 98

தேவர்க்குந் தேவனுய்
தீன ஜன நாதனுய்
மூவர்க்கும் உரியனுய்
முழுமுதல் மூர்த்தியாய்
ஆவிக்குஇனியனுய்
அரியனுய்ப் பெரியனுய்
காவியங்கண்ணனுய்க்
கருணை மணிவண்ணனுய்
நீவிமின்னுடையனுய்
நெஞ்சுகவர் நடையனுய்க்
கோவியர்கள் அன்பனுய்க்
குறையிலா இன்பனுய்
மூவுலக நாதனுய்
மோகன கீதம் இசை
தாவி உலகளந்த செந்
தாமரைப்பாதனுய்
பூவிலுறை மாமகள்
பூமகள் நாதனுய்
கோவிலுறை தெய்வமாய்க்
கொண்டல்நிறப் பையனுய்
சேவிக்குமடியவரை
வாழ்விக்கும்வள்ளலாய்
பாவிக்கும் பத்தர்க்கும்
பரமபத இன்பமாய்
பாவிக்குமருள் நல்கும்
பரப்பிரும்ம நாதனுய்
தேவிஎனு மூவர்க்கும்
தித்திக்குமன்பனுய்த்

தேவர்கணம், ஆயர்கணம்,
சிறுவர்கணம்தினமகிழ்,
பாவலர்கள், நாவலர்கள்
பரவுமருள் வடிவனைக்
கோவலக்குட்டனைக்
குழலூதுசிட்டனை
மாவலியைமண்கேட்டு
மறைத்திட்ட குள்ளனை
நாவிலுறைவாணிபுகழ்
நாதனைப்போதனைக்
காவிலுறை கண்ணனை
எண்ணுக திருப்பெற! 99

சக்கரக்கனலினால்
சத்துருவைப்பொசுக்குவான்
மிக்க பூ பாரத்தை
முன் நின்று விலக்குவான்
நக்கனும் நான்முகனும்
அறுமுகனும் சூழவே
தக்கதோர் நாரதனும்
தத்துவமுங்கேட்கவே
பக்கமெல்லாம் பசும்
பச்சையொளி வீசவே
அக்கரப்பொருளுமாய்
அதுபுகழ்மறையுமாய்ச்
சொக்கனைப் பிரும்மனைச்
சுடராழிக்கையனைச்
சிக்கலாம் படைப்பு காப்
பழிப்பெல்லாம் நடத்துவான்

சக்ரக்கையனைச்
சாரங்கபாணியைச்
சிக்கலான் மாமனைச்
சிந்தைதனில் நினை தினம். 100

கோதண்டம், செங்கரும்பு,
குளிர்பூக்கள், கொடும்பாணம்,
மாதண்டு, திகிரியுடன்,
வளை, பாசம், அங்குசமும்,
யாதொன்றுமுவமையிலாப்
பொன்முரளி, தன்னுடைய
மூதண்டம் முற்றுவிக்கும்
முன்கரங்கள் எட்டிலுமே
நாதன் தன் வலிகாட்டி
நடனமிடச்செங்கதிரின்
சோதி எனும் நிறங்காட்டிச்
சொக்குமுடல் எழில்காட்டும்,
மாதண்டைக் காலானை
மாயவனைப் போற்றுதுமே! 101

செங்கமலக்கண்ணனே
செவியமுத வண்ணனே
சொல்லக்கேளாய்
அங்கன்று விதுரர் தரும்
பாயசம், பசுங்கீரை
கண்ட சுவையும்
செங்குமுத வாயினள்
குந்திதரும் அன்னத்தும்
குசேலர் மனைவி

செங்கை தரும் அவலிலும்
சபரி தரும் கனியிலும்
என்ன சுவையோ
அங்கண்ணசோதையார்
அன்று தரும் பாலிலும்
அரிய தவசி
பொங்குமனப் பாரத்துவாசர்
எனும் முனிவரர்
புரிந்த விருந்தும்
செங்கனிவாய்ச்சியர்
ஆய்ச்சியர் அன்பிலும்
அளைந்த சுவையும்
இங்கென்றன் பாட்டிலும்
அச்சுவையே காணுவாய்
அம்புஜாட்சா! 102

## முடிவுச் செய்யுள்.

கண்ணன் கண்ணருளால்
காசினி மீதில் பரன்
வண்ணம் புகழ் நூலை
வாலைமுடித்திட்டேன்.

முரளீதரன் அருளால்
மூலம் புகழ் பாடும்
சரளக்கிரந்தம்யான்
தமிழில் மொழிபெயர்த்தேன்.

லீலா சுகர் அருளால்
லோலன்புகழ்பாடும்
மேலாம் நூலதனை
வாலை முடித்திட்டேன்.

சிந்தாமணியருளால்
செல்வன்சீர்பாடும்
நந்தாவிளக்கனையக்
கிரந்தம் முடித்திட்டேன்.

பில்வமங்களன் என்னும்
வித்தைக்கடல் அருளால்
செல்வமணிக் கிரந்தம்
செந்தமிழில் முடித்தேன்.

உங்கள் மூவர்க்கும்
உவகைக்கடல்மூழ்கும்
மங்கள இதயத்தால்
வணக்கம் கூறுவனே.

செங்கமலக்கண்ணன்
செவியமுதம் எழுத
மங்களநூல் தந்த
மங்களை வணங்குவனே.

சிந்தாமணிச்செல்வா
சீதரன் மாதவனும்
நந்தாமணி விளக்கின்
நலம் பல பாடினையே.

கர்ணாமிருதம் பாடும்
    கவிதைமணிக்குயிலே
கருணாமுதனே உன்
    கழலடி பணிந்தேனே.

மங்கள மணிவண்ணன்
    மாட்சிமை பாராட்டும்
செங்கமலக்கண்ணன்
    செவியமுதம் வாழி.

---

## ஜோதியாய் வருவாய்.

(19—7—52)

ஜோதியாய் வருவாய் தோழனும் கண்ணு
ஆதியாய்த் தோன்றுவாய் அன்பனும் கண்ணு!
நீதியாய் நீடுவாய் நேர்மையாம் கண்ணு
நித்தமும் புத்தம்புது உருக்காட்டுவாய்
வாதனைப்பட்டால் வந்தெதிர் நிற்பாய்
வானமாமுகிலாய் வழங்குவாய் தண்ணருள்
சோதனை செய்தபின் சுகமுமளிப்பாய்
ஜோதியே! நின்புகல்! தோழனே சரணம்!

---

# கண்ணே, மணியே!

## வா, வா, வா !!

(2—10—51)

கண்ணே! மணியே! வா வா வா
கருணாலயனே வா வா வா
பண்ணே! சுவையே! வா வா வா
பதியே! கதியே! வா வா வா
மண்ணே, விண்ணே! வா வா வா
மலையே! நதியே வா வா வா
எண்ணே! எழுத்தே! வா வா வா
இயலே! இசையே! வா வா வா! 1

உண்ணாரமுதே! வா வா வா
உலகுக்கொருவா! வா வா வா
தண்ணார் மதியே! வா வா வா
தருமக்கடலே! வா வா வா
கண்ணா! வண்ணா! வா வா வா
கலையே! எழிலே! வா வா வா
பெண்ணே! ஆணே! வா வா வா
பெரியாய்! சிறியாய்! வா வா வா! 2

பேசற்கினியாய்! வா வா வா
பெருமாள்! திருமால் வா வா வா
ஈசர்க்குரியாய்! வா வா வா
இறையே! மறையே! வா வா வா
நேசக்கடவுள்! வா வா வா
நிதியே! நிறைவே! வா வா வா

தாசர்க் கெளியாய்! வா வா வா
தாமோதரனே! வா வா வா! 3

புயலே! மழையே! வா வா வா
புதியாய்! பழையாய்! வா வா வா
பயனே! விணயே! வா வா வா
பரமா நிதியே! வா வா வா
நயமே! ஜயமே! வா வா வா
நெடுமால் வடிவே! வா வா வா
கயலார் விழியாய்! வா வா வா
கருமா மணியே! வா வா வா! 4

கமலா பதியே! வா வா வா
கருணு நிதியே! வா வா வா
அமலா பரணு! வா வா வா
அகமே புறமே! வா வா வா
விமலா, வரதா! வா வா வா
விதியே! விளேவே! வா வா வா
நம நாரணனே! வா வா வா
நடனக்குமரா! வா வா வா! 5

அரியாய்! பெரியாய்! வா வா வா
அருவே! உருவே! வா வா வா
துரியச்சுடரே! வா வா வா
சுகமா மலேயே! வா வா வா
உரிமைப்பொருளே! வா வா வா
உலகேழுடையாய்! வா வா வா
கரியாய்! குறியாய் வா வா வா
கடவுண் மணியே! வா வா வா! 6

இரவே! இருளே! வா வா வா
பகலே! சுடரே! வா வா வா
உரமே! திறமே! வா வா வா
உளமே! உயிரே! வா வா வா
திருவே! தருவே! வா வா வா
திசையே! விசையே! வா வா வா
உறவே! உணர்வே! வா வா வா
உனை நான் பணிவேன்! வா வா வா! 7

கவிதைச்சுடரே! வா வா வா
கலையின்எழிலே! வா வா வா
அமுதக்கடலே! வா வா வா
அறிவின் ஒளியே வா வா வா
குமுதப் பொழிலே! வா வா வா
குளிரே! வெயிலே! வா வா வா
அமைதிக்கனியே! வா வா வா
அவனிக்கதிபா! வா வா வா! 8

என்னை உடையோய்! வா வா வா
ஏழைக்கினியாய்! வா வா வா
மின்னல் உடையாய்! வா வா வா
மேகத்துடலாய்! வா வா வா
அன்னையப்பா! வா வா வா
அன்பே! இன்பே வா வா வா
கன்னல் ரசமே! வா வா வா
கண்ணின் மணியே வா வா வா! 9

---

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.

# திருமாலின் பெருமை

(12—11—51)

வந்தாய் என்றால் வாராதாய்
வாராய் என்றால் வருவானே!
எந்தாய் என்னை ஆண்டோனே
ஏழை இதயம் பூண்டோனே!
தந்தாய், பாதம் கண்டேனே
தரையில் துன்பம் விண்டேனே!
நந்தன் மகனே நானேதும்
சொர்க்கம் வேண்டேன் வேண்டேனே! 1

வேண்டாம் என்றால் தருவோனே
வேண்டும் என்றால் மறைவோனே
ஆண்டாய் என்றால் வாரானே!
"அபயம்" என்றால் வருவானே!
தீண்டேன் என்றால் தொடுவானே
தொட்டேன் என்றால் தீண்டானே!
நீண்டே நிற்கும் நெடியானே
நிலத்தில் நீயே கதி கோனே! 2

வா வா என்றால் போவானே
வள்ளால் என்றால் தாரானே!
"கா, வா" என்றால் வருவானே
கண்பார் என்றால் மறைவானே!
"போ, போ" என்றால் போகானே
புகுந்தே உள்ளே நிறைவானே!
தேவா என்றால் சிரிப்பானே
தீயோர் உள்ளும் இருப்பானே! 3

“கண்டேன்” என்றால் காட்டானே
காணேன் என்றால் வருவானே
உண்டே என்றால் அழிப்பானே
இல்லை என்றால் படைப்பானே!
பண்டே என்றால் இன்றாவான்
இன்றே என்றால் முன்னாவான்
தொண்டே பூண்டேன் தூயோனே
திருமால் உன்றன் ஆள்யானே! 4

அதுவும் இதுவும் ஆவானே
அல்லவை நல்லவை ஆவானே!
மதியும் சுடரும் ஆவானே
மண்டலம் விண்டலம் ஆவானே!
துதியும் நிந்தையும் ஆவானே
தூயவை கெட்டவை ஆவானே!
கதியும் கழலும் தருவானே
கண்ணன் என்ற பெருமானே! 5

---

# கண்ணன் துதி

("எம்பிரான் ஐம்பதி" லிருந்து)

(23—8—50)

கண்ணன் எனும் மணித்தண்ணொளித் தாரகை
வண்ணம் புகழ்ந்திடுவேன்.
எண்ணரும் இந்தியர் ஏற்றி மகிழ்ந்திடும்
இறைவனை உரைத்திடுவேன்.
பண்ணுடன் பாட்டினில் பரவி உலாவிடும்
பகவனைத்துதித்திடுவேன்
மண்ணினில் மரகத வண்ணனின் மெய்ப்புகழ்
பாடிமகிழ்ந்திடுவேன். 1

நாதச்சுடர் ஒளிநாதனை நாட்டினில்
நாளும் புகழ்ந்திடுவேன்
பாதச்சுடர்தனை பாலைக்கருள் பரன்
பான்மை விளக்கிடுவேன்
மாதவன் யாதவன் மாமகள் நாயகன்
மகிமை யுரைத்திடுவேன்
பாதகம் யாவும் பகைரெனச் சாய்ந்திடப்
பரமனைத்துதி புரிவேன். 2

பச்சைப் பசுஞ்சுடர் பைந்தமிழ்க் கொண்டலைப்
பரவி மகிழ்ந்திடுவேன்.
நச்சரவதன்முடி நடமிடுமிணையடி
நாடித்துதித்திடுவேன்.
அச்சமகற்றிடும் அய்யனை மெய்யனை
அகத்துள் இருத்திடுவேன்.
கச்சரைப் பட்டுடைக் கண்ணபிரான் கழல்
கண்டு களித்திடுவேன். 3

காமமும் கோபமும் லோபமும் மோகமும்
கலங்கிடத் துதிபுரிவேன்
வாம மடக்கொடி வள்ளியின் தந்தையை
வணங்கி மகிழ்ந்திடுவேன்
நாமமும் நாரண, நாரண என்றுமே
நாளும் சபித்திடுவேன்
தாமத்துளபணி தாமோதரன் புகழ்
தரணியில் பாடிடுவேன். 4

கதம்ப மரத்தடி கானம் பயில் குயில்
கண்ணனை எண்ணிடுவேன்
மதம் கொழியமுனை நதிக்கரை உலவிடு
மன்னனை உன்னிடுவேன்
சதங்கைப் பதத்துடன் சரச நடம் புரி
சதுரனைத் துதிபுரிவேன்
அதம்புரி ஆணவப் பேயை யழித்திடும்
அச்சுதனை நினைப்பேன். 5

வா, மணிவண்ண செந்தாமரைக்கண்ண
வசந்த மலர்க் கொழுந்தே.
பாமையின் காதல, பாரதம் வென்றவ
பாக்ய மணிக்கதிரே,
காமனை ஈந்தவ, காளியின் சோதர
கானில் நடிப்பவனே
தூமலர்ப்பங்கயத்தாரணி மார்ப
துரியப்பெரும் பதியே. 6

வா, அருள்தாபர, வாசுதேவ ஹரி
வாசவன் சிநேகிதனே

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



சாகரத்தலையிடை யோகநித்திரைபுரி
சாரங்க பாணியனே
மாமுகில் போல் வரு கோமக, நாமகள்
கொழுநனைத் தந்தவனே!
தாமரைக் காலிணை சந்ததம் எண்ணிடும்
தனயையைக்கா பரனே! 7

பச்சைப்பசும்முகில் பாண்டுரங்கபதி
பால கோபாலகனே!
அச்சுத, ஆருயிர் நாயக, நாரண
பூரண காரணனே!
பிச்சையுருக் கொளும் பெம்மான் தழுவிடு
பேரருட் சோதியனே!
மச்ச உருக்கொளும் மாயவ ஆயவ
மதுரைப்பதி சரணே! 8

மரகத மேனிய, மதுரையின் நாயக
மாலழகா அருள்வாய்!
நரஹரி முரஹரி ஹரிஹரி ஆண்டவ!
நடிப்பாய் நிதம் நெஞ்சில்
சரவண பவகுகன், சங்கரி, சங்கரன்
மகிழும் பரம் பொருளே!
வர அருள்தர நினை வரத வணங்கினள்
வாலை நின் தாள் சரணே! 9

பாஷையும் சொற்களும் பார்த்தறியாத
பரம் பொருளே யருள்வாய்!
வேஷமும் நாமமும் குணமுமிலா ஒரு
விஞ்சை செய்மால் வருவாய்!

ஆசையெலா முனக்காக்கினள் அய்யனே!
    அச்சுதனே வருவாய்!
பாசமறுத்துயர் பக்தியளித்துடன்
    பாலையிடம் வளர்வாய்! 10

எம்பிரான் வாராய் என்றும்
    எம்மானே வாராய் என்றும்
அம்பிலே அரவில் தூங்கும்
    அன்பனே வாராய் என்றும்
நம்பியே உன்னை நாளும்
    நான் அழைக்கின்றேன் அய்யா!
எம் பெருமானே மாலே!
    என்னிடம் வளரும் சோதீ! 11

சோதியாய் ஆதியாகிச் சுந்தரமூர்த்தியாகிக்
கோதிலாதென்னை யாண்ட கொற்றவன்
நினைவே காப்பு.

---

# உள் ஒலி

(18—10—49)

கைவிட மாட்டா னென்றோலி ஒலி நாதம்
கடல் நிறக்கடவுள் என்றோலி ஒலி நாதம்
பொய் விடந்தீர்ப்பான் என்றோலி ஒலி நாதம்
புன்மை தவிர்ப்பான் என்றோலி ஒலி நாதம்
பையரவணையான் என்றோலி ஒலி நாதம்
பச்சை வண்ணத்தன் என்றோலி ஒலி நாதம்
வைய மளந்தான் என்றோலி ஒலி நாதம்
வாய்மையைக் காத்தான் என்றோலி ஒலி நாதம். 1

எண்ணற் கினியான் என்றோலி ஒலி நாதம்
என்னுள் அமர்ந்தான் என்றோலி ஒலி நாதம்
கண்ண பெருமான் என்றோலி ஒலி நாதம்
கலை முடிவானுன் என்றோலி ஒலி நாதம்
பண்ணின் இசையான் என்றோலி ஒலி நாதம்
பாட்டின் பொருளான் என்றோலி ஒலி நாதம்
கண்ணில் மணியான் என்றோலி ஒலி நாதம்
காதல் மெய்க்கடவுள் என்றோலி ஒலி நாதம். 2

பாம்பில் நடிப்பான் என்றோலி ஒலி நாதம்
பதும பதத்தான் என்றோலி ஒலி நாதம்
நாம்பணி நம்பன் என்றோலி ஒலி நாதம்
நாத நடுவான் என்றோலி ஒலி நாதம்
மாம்பழ வாயான் என்றோலி ஒலி நாதம்
மதுரைக் கிறைவன் என்றோலி ஒலி நாதம்
தாம்பணி அரையான் என்றோலி ஒலி நாதம்
தன்னடி தந்தான் என்றோலி ஒலி நாதம். 3

ஞானக்கடலான் என்றொலி ஓலி நாதம்
நல்லார்க்கு நல்லன் என்றொலி ஓலி நாதம்
மோனக் கொழுந்தென்று என்றொலி ஓலி நாதம்
மூத்திக்கு வித்தாம் என்றொலி ஓலி நாதம்
காளத்து இனிமை என்றொலி ஓலி நாதம்
கட்டறு பட்ட தென்றொலி ஓலி நாதம்
வானத்து வண்ணன் என்றொலி ஓலி நாதம்
வாழ்வளி வள்ளல் என்றொலி ஓலி நாதம். 4

அற்புதக் கூத்தான் என்றொலி ஓலி நாதம்
அண்ணல் அரசன் என்றொலி ஓலி நாதம்
தற்பரம் பொருளான் என்றொலி ஓலி நாதம்
தஞ்சமு மாவான் என்றொலி ஓலி நாதம்
சொற்பதங் கடந்தான் என்றொலி ஓலி நாதம்
சோதிப் பொருளான் என்றொலி ஓலி நாதம்
கற்பனைக் கெட்டான் என்றொலி ஓலி நாதம்
ககனந் தொலியான் என்றொலி ஓலி நாதம். 5

கவிதையின் கவின் என ஓலி ஓலி நாதம்
கலைகளின் முடிவு என ஓலி ஓலி நாதம்
அமுதந்தமிழான் என்றொலி ஓலி நாதம்
அந்த மில்லாதி என்றொலி ஓலி நாதம்
உமையவள் அண்ணன் என்றொலி ஓலி நாதம்
உண்மையுருவாம் என்றொலி ஓலி நாதம்
நமதிந்து குலத்தான் என்றொலி ஓலி நாதம்
நாரண நாதன் என்றொலி ஓலி நாதம். 6

பாரத சோதீ என்றொலி ஓலி நாதம்
பாரதம் மூடித்தான் என்றொலி ஓலி நாதம்

பாரதி கடவுள் என்றொலி ஒலி நாதம்
பண்டைப் பொருளான் என்றொலி ஒலி நாதம்
வீரக் கனலாம் என்றொலி ஒலி நாதம்
வெற்றிக் கொடியான் என்றொலி ஒலி நாதம்
மீரா மணாளன் என்றொலி ஒலி நாதம்
மேதக்க கல்வி என்றொலி ஒலி நாதம். 7

ஆண்டாளை ஆண்டான் என்றொலி ஒலி நாதம்
அடியார்க்கு நல்லான் என்றொலி ஒலி நாதம்
தூண்டாத தீபம் என்றொலி ஒலி நாதம்
தொல் மறைச்சுடர் என ஒலி ஒலி நாதம்
வேண்டுவ ஈவான் என்றொலி ஒலி நாதம்
வித்தை தருவான் என்றொலி ஒலி நாதம்
காண்டீபன் நண்பன் என்றொலி ஒலி நாதம்
கவலையறுப்பான் என்றொலி ஒலி நாதம். 8

இதயத்தில் இருப்பான் என்றொலி ஒலி நாதம்
எப்போதும் நடிப்பான் என்றொலி ஒலி நாதம்
நிதமும் புரப்பான் என்றொலி ஒலி நாதம்
நின்மல மூர்த்தி என்றொலி ஒலி நாதம்
வித விதமாவான் என்றொலி ஒலி நாதம்
விஞ்சை புரிவான் என்றொலி ஒலி நாதம்
சதமவன் பாதம் என்றொலி ஒலி நாதம்
சற்குரு நாதன் என்றொலி ஒலி நாதம். 9

கண்ணன் எனும் புண்ணியனும்
என்னுடையன் ஆனான்
கருதரிய இதய நடு அரசு செயலானான்
மண்ணவர்கள் வாய்பிளக்க மன்னன்
எனை ஆண்டான்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



மாதவனைப் பெற்றபினர்
மா நிலமும் வேண்டேன். 10

இந்துகுலத்திளவரசு எனது பதியானுன்
சொந்த மெனச்சொல்லி எந்தன்
துயரமெல்லாம் தீர்த்தான்
அந்தமிகு அருள் வடிவான் அற்புதமும் செய்தான்
அவன் துணையைப் பெற்ற
பின்னர் அவனியுமெதற்கு! 11

கண்ணன் எனும் கரியமணி
கண்ணின் மணியானுன்
எண்ணமதில் இனிய பிரான்
என்னை எடுத்தாண்டான்
வண்ண நீல மணி யன்னுன்
"வா புதல்வி" என்ருன்
வாசுதேவன் ஆண்ட பின்னர்
வீணில் வருந்துவனே? 12

பத்தி எனும் முத்துமணி
பவளவாயன் அளித்தான்
சத்தமிலா தென் மனதில்
நர்த்தனமும் புரிந்தான்
சித்தியுடன், வித்தை, ஞானம்,
மூன்று மெனக்களித்தான்
அத்தன் அருள் பெற்றவட்கு
அச்சமினி ஏது? 13

அச்சமில்லை அச்சமில்லை
அச்சமேது மில்லையே.

அச்சுதனுர் ஆண்டதன் பின்
துச்சமிந்த உலகே
"பிச்சி" எனப் "பேதை" எனப்பிதற்றும்
இந்த உலகு
பச்சை வண்ணன் அருளிருக்கப்
பயமேது எமக்கே? 14

அத்துவிதத்தத்துவத்தை
அருளாளன் அளித்தான்.
செத்தவர் போல் நடமாடச்
சித்த திடம்அளித்தான்
சித்தி உயர் புத்தியுடன்
விரக்தி வைரமளித்தான்
உத்தமன் அருள் இருக்க
உலகம் குப்பை யன்ருே! 15

---

# கண்ணன் மணி வண்ணன்

(20—1—49)

ஓசை ஒலியெலாம் ஆனாய் கண்ணா
உலகளந்த மாயனாய் நின்றாய் கண்ணா
ஆசைக்கும் பூசைக்கும் அரியாய் கண்ணா
அறிவார் அகத்துளே அமர்வாய் கண்ணா
நேசத்தார் நெஞ்சினில் நிறைவாய் கண்ணா
நேர்மை யுடையார்க் குரியாய் கண்ணா
பேசப் பெரிதும் இனியாய் கண்ணா
பேரொளியாம் நீலமணி! வண்ணா கண்ணா! 1

சுபத்திரைக்கு முன்பிறந்த சோதீ கண்ணா
துய்ய பல தேவன் துணைவா கண்ணா
பவத் திரையைக் கிழித்தெறியும் அறிவே கண்ணா
பாலனுருக் கொண்ட பரனே கண்ணா
அவக்கடற்குப் புணையாம் எம்மரசே கண்ணா
ஐவர் தமக்கினிய அன்பே கண்ணா
சிவத்துறையில் செல்விக்கும் செறிவே கண்ணா
சின்மயானந்த மணி வண்ணா கண்ணா! 2

பத்திக்குத் தித்திக்கும் பழமே கண்ணா
பார்த்தனுக்குத் தேரோட்டும் பணிவே கண்ணா
முத்திக்கு வித்தான முதல்வா கண்ணா
மூலப் பழம் பொருளின் முடிவே கண்ணா
புத்தி தனிற் பூரணமாம் பொலிவே கண்ணா
போற்றுமடியார்க்கினிய மூர்த்தி கண்ணா

சத்தி சிவை சோதரனே சரணே கண்ணா
சக வாழ்வே கோவலனே குமரா கண்ணா! 3

நீல நெடுந்திருமாலே நிறைவே கண்ணா
நேமிச்சுடர்க் கரத்தாய் நெடியாய் கண்ணா
கோலத் திருமுடியாய் குழகா கண்ணா
குழலூதிக் கூத்தாடும் கோவே கண்ணா
ஆலிலைமேல் கால் சுவைக்கு மழகே கண்ணா
அடியார்கட் காரமுதமானாய் கண்ணா
சோலை மலைக் கல்லழகா கள்வா கண்ணா
சோதிச்சுடர்ப் பொருளே சரணம் கண்ணா! 4

---

# அபயம்

(10—1—50)

அனலிற் பிறந்தவளை அர்ச்சுனனின் காதலியைச்
சனசபையில் காத்திட்ட சக்கரத்தோய்!
நின்னபயம்! 1

கற்புப் பெருங்கனலைக் காதற் கவின் கடலை
அற்பரிடை காத்திட்ட அச்சுதா நின்னபயம்! 2

ஐவர் அரும் பத்தினியை ஆனந்த மாமயிலை
நைபவளைக்காத்திட்ட் நாரணா நின்னபயம்! 3

துய்யமணிச்சுடரைச் சோதிப் பெருங்கற்பைப்
பொய்யர் நடுகாத்திட்ட பூரணா நின்னபயம்! 4

ஐவேந்தர் கட்டுண்டு அன்னை துடிக்கையிலே
பைங்குழலைக் காத்திட்ட பாம்பணையோய்
நின்னபயம்! 5

இருகையும் விட்டன்னை இதயம் துடிக்கையிலே
விரைவாகக் காத்திட்ட வித்தகனே நின்னபயம்! 6

துகிலையுரிகையிலே துரௌபதியைக் காத்தவனே!
அகிலமெலாந்திகைத்து நிற்க "அஞ்சல்"
என்றாய் நின்னபயம்! 7

பாண்டவரின் பத்தினிக்காய்ப் பாரதம் முடித்தவனே!
ஆண்டவனே அன்னைகுழல் பின்னினவா
நின்னபயம்! 8

அலறியதோர் ஆனைக்கு அபயமளித்த பிரான்
உலகினிலே உத்தமரின் உற்றதுணை
நின்னபயம்! 9

பத்தனுக்காய்க் கம்பத்தில் படீரென வெடித்தவனே
சத்தியத்தைக்காத்திடவே சக்கர மெடுத்தவனே! 10

தேவகி திருவயிற்றில் பாலகனாய் வந்தவனே!
காவலனே! கார்மேனிக் கண்ணபிரான்
நின்னபயம்! 11

விதுரனிடும் கீரை விருந்தை உகந்தவனே!
அதிஏழை சுதாமனுக்கு ஐசுவரியம் தந்தவனே! 12

கூனிக்கருள் புரிந்த கோபால மாமணியே
ஞானிமனம் வளரும் நாரணனே தூமணியே! 13

திருப்பாற்கடல் துறந்து திருமேனி வாடிடவே
விருப்பாலவதரித்த கருமணியே நின்னபயம்! 14

கமலை மடிதுறந்து கருடனின் தோள் துறந்து
அமரபதம் துறந்து நரன் ஆனாய் நின்னபயம்! 15

சேடன் முடிதுறந்து ஸ்ரீவைகுண்டம் துறந்து
பாடுபடுமன்பருக்காய்ப் பிறந்தவனே
நின்னபயம்! 16

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



மனிதக்குலத்துக்கோர் மாணிக்கமாமலையே!
புனிதக்கனித்திருவாய்ப் புண்ணியனே
நின்னபயம்! 17

கீதைமணியளித்த கேசவனே நின்னபயம்
கோதைக்கருள் புரிந்த கோவிந்தா நின்னபயம்! 18

மீரா மடமாதை நேராய் அழைத்தவனே,
காராண்ட மணி வண்ணா கண்ணா
நினதபயம்! 19

பாதை வழி இருளில் பேதைமனம் நோகுதடா?
போதுமடா சோதனையும் பூந்துழாய்
மாலையனே! 20

---

# மதுரா பதி மா மணி

(20—1—49)

அரியாய் பெரியாய் அறிவாம் சுடரே
அரியே அரசே அருளாம் பொருளே
கரியாய் கருணா வருணாலயனே
கயவோர் பகைவா கருமா முகிலே
வரைமேல் வளரும் வரதா விறலோய்
கருடாசனனே கமலை தலைவா
மறை நற்கடலே மதிமா வதனா
மதுராபதி மாமணியே சரணம்! 1

காமக் கடவுட்டாதாய் வேதா
கவலைக் கிரியைப்பொடி செய் கதையோய்
பாமைக் கொரு நற்பதியே நிதியே
பதுமானனனே பரமாதவனே
ஏமக் கதிர் போலிலகும் உடையாய்
ஏறு நேர் நடையாய் இனியாய் இசையாய்
தாமத் துளபத் தடமார் மார்பா
மதுரா பதி மாமணியே சரணம்! 2

நீலத் தோகை நிறை நீள் முடியாய்
நிகிலாதிபனே நிகமாகமனே
வேலைத் திரைநீர் நடுவே துயிலார்
மாலே மறை நன்னூலே நிறைவே
ஆலைக்கரும் பாயலை யென் மனதை
அறியாய் போலும் சுருதிச்சுடரே
காலங் கடவேல் கருணாகரனே
மதுரா பதி மாமணியே சரணம்! 3

துவரைப்பதிவாழ் துரையே சரணம்
தவ நந் நெறியே தலைவா சரணம்
அபலைக் கினி யுன்னருளே பொழிவாய்
ஜயா ஆழிக்கையா சரணம்
இப நன்னடையாய் இறைவா சரணம்
இறைவர்க் கினியோய் இறுதிப் பொருளே
சுபசீதரனே பல சோதரனே
சுக காரண நாரணனே சரணம்! 4

மதுரா பதி மாமணியே சரணம்
மலராள் கணவா மறைமா முகிலே
சதுரானன மா மதவேள் சனகா
ஜலஜானன நீல விலோசனனே
மது வாசக மின் துவரைக் கதிபா
மது நீள் வனமே மகிழும் மகிபா
துதியே புரிவார்க் குரியாய் சரணம்
அடியாள் மொழி ஏற்றருள்வாய் சரணம்! 5

திரிபுர ஹர சிவன் மகிழ் முர ஹரனே
நர ஹரி உருவுடை சமர சதுரனே
திருமகள் கொழுந திலகமணி பரனே
ஹரி ஹரி ஹரி என நினை தினம் மனனே!

---

# நிறையும் ஒருவன்

(19—7—52)

தழை மாமுகில் போலுருவன் ஒருவன்
தமியேனிட மேகுடியாய் வளர்வோன்
மழையாய்ப்பொழிவான் மதுராபதியன்
மதியாய் ஒளிர்வான் மறைமா நிதியன்
பொழிவான் முகிலாய்ப்புதிதாய் இனிதாய்
புதுமென்மலராய் மணமாய் மதுவாய்
குழைபூங்கொடியாய் குளிர்வானிலவாய்
திகழ்வான் துவரைப்பதியாம் புனிதன். 1

பசும் புற்றரையாய் படர்வான் சுடராய்
பசுமாமுகிலாய் பனிதோய்மலையாய்
விசும்பின் கதிராய் விண்மீன் சுடராய்
விரிமின்கதிராய் விளைமாகடலாய்
பசுந்தேன் மலராய்படர்பூம்பொடியாய்
பகர்பைங்கொடியாய் கொடிசூழ்மரமாய்
பசிதீர்பயிராய் பலவாம் உயிராய்
புவனப்பொருளாய் நிறைவான் ஒருவன். 2

நெளிமென் நதியாய் நிறைவெண்ணிலவாய்
நளினப்பொழிலாய்-பொழிலார் மயிலாய்
களிமாபிடியாய், மதமார்கஜமாய்
தளிர்பூந்துளிராய் துளிர் வாழ் அழகாய்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



துளிர்சேர் பனியாய் பனிசேர்மலையாய்
குளிர்பைந்தடமாய் தடம்வாழ் அனமாய்
குயிலாய்க் கிளியாய்க்குரல், இன்இசையாய்த்
திகழ்வான் ஒருவன் திகழ்வான் வடிவன். 3

மலையாய், முகிலாய், நதியாய், ஜலமாய்
மதுசார்மலராய், மலர்ஆர் மணமாய்
இலையாய்த் துளிராய்ப் பூவாய்க் காயாய்
இனிதாம் கனியாய் கனிஆர் ரஸமாய்
சிலையாய், வடிவாய், திருவாய், உருவாய்
சிறிதாய், பெரிதாய்க் குளிராய், வெயிலாய்,
கலையாய் கலைவாழ் அழகாய் மொழியாய்
கடலாய் உலகாய் நிறைவான் கண்ணன்! 4

இசையாய், இசையின்பயனாய்ப் பொருளாய்
இனிதாம் நடமாய் நடம் ஆர் லயமாய்
விசையாய், சுதியாய், சுதிசேர்குழைவாய்
விரைவாய், மெதுவாய், கதியாய், நடையாய்
அசையா நிலையாய் அசையும் ஜகமாய்
ருசியாய் ரஸமாய், பசியாய், உணவாய்
நசியாப் பொருளாய் நசியும் உடலாய்
திகழ்வான் நாதன் நடமார் பாதன்! 5

மொழியாய், மொழியிற் பொருளாய்ப்பயனாய்
முதுமாமறையாய் மறைசொல்வழியாய்
விழியாய் விழியின் மணியாய் இமையாய்
வியன்மாஉலகாய் உலகின்பதியாய்

அழியாஉயிராய் அழியும்உடலாய்
அதுவாயிதுவாய் அலதாய் உளதாய்ப்
பொழிவான்முகிலாய்ப் புதிதாய்ப் பழசாய்ப்
புலனாய் அறிவாய்ப் புகுவான் கண்ணன். 6

மனமாய் அகமாய் மனம்சோரிடமாய்
மதுராபதியாய் துவரைப்புரியாய்
கனவாய் நனவாய் நினைவாய் நிதியாய்
கனவும் உணரா நிலையாய் நெறியாய்
தினமாய்ப் பகலாய்த்திருவாய் இழவாய்
திருமால் எனுமோர் தெய்வப்பொருளாய்
எனதாய் உனதாய் எதுவும் அவனாய்
இயற்கை நலனாய் நிறைவான் புனிதன். 7

---

# மறவேன் கண்டாய், மாலே!

(7—12—51)

ஆழ்வார்கள் உகக்கும் பொன்னி
அரங்கமா நகருளானே!
ஆழாழி நீரில் அன்று
ஆலிலைதுயின்ற கோனே!
ஏழேழ்மா பிறவி எய்தி
எக்கதியடைந்த போதும்
தாழ்மாலைத்துளவ மார்பா!
தாளடி மறவேன் கண்டாய்! 1

சந்திர சூடன் புல்கும்
சுந்தர நீலச் சோதி!
இந்திரை கணவா, கண்ணு,
இன்னிசை யரங்கத்தண்ணல்!
இந்திர போகந்தன்னுள்
என்னை நீ ஆழ்த்தினாலும்
வெந்துயர் நரகாழ்ந்தாலும்
வளரடி மறவேன் கண்டாய்! 2

காவிரிசூழும் காந்திக்
கவினுயர் அரங்கநாதா!
பூவிரி பொன்னி பாயும்
பூம்பொழிலரங்க வேந்தே!

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



யாவரும் போற்றும் வண்ணம்
என்னை நீ ஏத்தினாலும்
கோவலா, கோல நீலக்
குளிரடி மறவேன் கண்டாய்! 3

சீரங்கப் பட்டணத்தில்
சிறந்தொளிர் அரங்கத்தம்மா!
நாரணா, நாத வேத காரணா
நடன சோதீ!
பாரிலே துயரம் எய்திப்
பஞ்சுபோல் பறந்தாலும் நின்
சீருயர் தெய்வ வண்ணத்
திருவடி மறவேன் கண்டாய்! 4

கேரள நாட்டில் சீதக்
கடற்கரை துயிலும் தேவே!
பாரளந்தானே! பச்சைப்
பார்வதி மகிழும் அண்ணா!
தாரணியாளை வேட்ட
தரும மாமணியே மாலே!
பாரிலே எது வந்தாலும்
பைங்கழல் மறவேன் கண்டாய்! 5

இகபரமிரண்டுமின்றி
இழிவடைந்தழிவுற்றாலும்
சகதலந்தனிலே செல்வம்,
புகழ், சுகம் இழந்திட்டாலும்

நகை செய யாரும் நாட்டில்
நலமெலாம் தொலைந்திட்டாலும்
அகமதில் உனது பாதம்
அய்யனே, மறவேன் கண்டாய்! 6

எப்பதி உறைந்திட்டாலும்
எவ்விதம் வாழ்ந்திட்டாலும்
எப்படி இருந்திட்டாலும்
எவ்வகை வளர்ந்திட்டாலும்
அப்பொழுதங்கே அவ்வா
றவ்வகை யரங்க மன்னு
எப்பொழுதும் என் நெஞ்சில்
இணையடி சுடரும் கண்டாய்! 7

———

# தூக்கம் துற, பரந்தாமா.

(12—11—51)

அரங்கமா நகருள் வைகும்
அரசனே துறப்பாய் தூக்கம்
தரங்கப்பாற்கடலுள் பள்ளி
கிடந்தவா துறப்பாய் தூக்கம்
குரங்கு பாய் வேங்கடத்தோய்
கோவலா துறப்பாய் தூக்கம்
நிறங்கிளர் பச்சை வண்ணு,
நின்மலா தீர்ப்பாய் ஏக்கம்! 1

அனந்தமா புரத்தில் வைகும்
அன்பனே உறக்கம் நீப்பாய்!
சிறந்த சீரங்கநாதா,
சின்மயா உறக்கம் நீப்பாய்!
பொருந்து வற்கலையில் வாழும்
புண்ணியா உறக்கம் நீப்பாய்!
திருந்து சீர்ப் பூரி வைகும்
ஜகந்நாதா தீர்ப்பாய் ஏக்கம்! 2

பதரி நாரணனே பச்சைப்
பசுமுகில் மணியே வாராய்
உதரத்தில் உலகடக்கும்
உலகளந்தோனே வாராய்

குதிரையும் கரியும் தேரும்
குவலயந்தனில் இருக்க
அதிரப்பாய் கருடப் புள்ளில்
அமர்ந்திடும் அழகா வாராய்! 3

செந்திருவாளைச் சேரும்
செங்கண் மாலரசே வாராய்!
பைந்தரையாளைப் புல்லும்
பசுமணிமலையே வாராய்!
சந்ததம் என்னுள் வைகும்
சரவணன் மாமா வாராய்!
சுந்தரி வள்ளி தேவ
ஸேனையின் தந்தாய் வாராய்! 4

அந்தியும் பகலும் உன்னை
அழைப்பன் யானரங்கா வாராய்
பந்து தாய் தந்தை சுற்றம்
பாரில் நீ பாண்டுரங்கா
எந்தனின்னிதய மென்னும்
மென்மலர் வளரும் துங்கா!
உந்தனைத்தூங்க வொட்டேன்
ஓடிவா ஓ சீரங்கா!! 5

பாற்கடல், பாமை, பூமி,
பாவை ருக்மிணியாள், ராதை
ஆர்ப்பரி பொன்னிசூழும்
அரங்க நாயகி, ஸ்ரீதேவி

மார்பினில், மடியில், நெஞ்சில்
மகிழ்துயில் கொள்ளும் மாலே!
நாரணா தூங்கவொட்டேன்!
நாயகா ஓடிவாராய்! 6

தூங்கினாய் தொல்லை நாட்கள்
தூயனே போதும், போதும்!!
ஏங்க நானிங்கு நீயும்
தூங்க நான் பார்க்கமாட்டேன்!
பாங்கர் நன் மணிகள் கொஞ்ச
பட்டுடை பளபளக்கத்
தாங்கிடும் சேடன் பள்ளி
நீங்கியே ஓடி வாராய்! 7

திருமகள் வெருவி நிற்க
தினகரன் வெட்கி நிற்க
திருமுடி பீலி, மாலை
திரும்பியே வளைந்து நிற்க
அருமறை, கருடன், சேடன்
அனைவரும் திகைத்து நிற்க
கருமுகில் மணியே கண்ணா
கடிதினில் ஓடி வாராய்! 8

பாற்கடல் துளிகள் சிந்த
பட்டுடை சோதி சிந்த
நாற்றிசை தோறும் நின்கண்
வழி பொழி அமுதம் சிந்த

ஈர்த்து நீ ஓடும் போதில்
பணியணிமணிகள் சிந்த
ஆர்த்தெழு அன்பு சிந்த
அய்யனே என்முன் வாராய்! 9

மோகன முறுவல் பூக்க
முகத்தினில் கருணை பூக்க
ஆகத்திலணிந்த மாலை
அங்கையில் சங்கு பூக்க
வேகத்து விசையினாலே
வேணுவில் கானம் பூக்க
யோகத்து நிதியே தூக்கம்
நீங்கியே ஓடி வாராய்! 10

---

# வந்தனை வாஸுதேவா!

(12—11—51)

வந்தனை வாஸுதேவா
வளர்துயில் நீங்கி என்முன்
உந்தனை என்ன சொல்லி
உகப்பன்யான் உலகளந்தோய்
சிந்தனை உனக்குத்தந்தேன்
சேவடி எனக்குத்தந்தாய்
பைந்துழாய்ப்பரமா உன்னைப்
பகலிலே கண்டு கொண்டேன்! 1

ஆடிடும் தோகைபோல
அய்ய நீஆடி வந்தாய்
பாடிடும் பூங்குயில் போல்
பரம நீ பாடி வந்தாய்
ஓடிடும் புள்ளிமான் போல்
உத்தமா ஓடி வந்தாய்
தேடிடும் மறைகள் உன்னை
நாடி நீ என் முன்வந்தாய்! 2

அன்னமென் பறவை போல
அன்ப நீ அசைந்து வந்தாய்
வன்ன நற்கிள்ளை போல
வரத நீ பறந்து வந்தாய்
மின்னொளிர் பூவை போல
மன்ன நீ கொஞ்சி வந்தாய்!

என்ன தான் சொல்லுகேன் யான்
ஏழையேன் ஏழையேனே! 3

புள்ளினத்தரசு போல
புனித நீ பறந்து வந்தாய்!
தெள்ளமுதத்தைப் போல
தேவ நீ தித்தித்து வந்தாய்
வள்ளுகிர்ச் சிங்கம் போல
வள்ளலே பாய்ந்து வந்தாய்
துள்ளுமா வேங்கை போல
தூயனே துள்ளி வந்தாய்! 4

கரி, பரி, ஏறு போல
கம்பீரமாக வந்தாய்
உரிய மின்கொடியைப் போல
ஓய்யாரமாக வந்தாய்
கருமுகில் வாரி போலக்
கருணையைப் பெய்து வந்தாய்
ஹரி, ஹரி அடியாள் முன்பு
குருபரன் ஆக வந்தாய்! 5

நீல மா மின்னல் போல
நின்மலா துடித்து வந்தாய்
கோலமார் மதியைப் போலக்
கோவலா குளிர்ந்து வந்தாய்
ஞாலமா ஞாயிற்றைப் போல்
நல்லொளி வீசி வந்தாய்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



பாலக வடிவாய்ப் பாரில்
பாலை முன் ஓடி வந்தாய்! 6

அருவிநீர் வெள்ளம் போல
அன்பினைச் சொரிந்து வந்தாய்!
இருவினையழிக்கும் தீயாய்
என்முனே எரிந்து வந்தாய்!
பெரியதோர் கங்கை போலப்
புத்தொளி பொங்கி வந்தாய்!
அரியனே அழைத்த போதில்
அக்கணம் ஓடிவந்தாய்! 7

சக்கரம் எடுத்து வந்தாய்
சங்கினை ஊதி வந்தாய்!
சக்கரச் செங்கை தன்னில்
சாரங்கமேந்தி வந்தாய்!
நெக்கு நெக்கேங்கச் செய்யும்
வேய்ங்குழல் ஊதி வந்தாய்!
பொக்கென அழைத்த போதே
பொன்னொளி வீசி வந்தாய்! 8

கத்தியை உருவி வந்தாய்!
கதைதனைச் சுழற்றி வந்தாய்!
முத்தினைப் பழிக்கும் வெள்ளி
முறுவலைக் காட்டி வந்தாய்!
“இத்தினம் அழிப்பேன் உன்றன்
எதிரியார் சொல்லாய்” என்றாய்

அத்தனே அடியாட்காக
அரிதுயில் நீங்கி வந்தாய்! 9

அன்பினைப் பொழிந்து வந்தாய்
அல்லவை நீக்கி வந்தாய்
என்பினை உருக்கி வந்தாய்
ஏழையை அணைக்க வந்தாய்
துன்பினைத் தொகைத்து வந்தாய்
தூய்மையைத்தூவி வந்தாய்
அன்பனே கண்ணா என்றன்
அகத்துளே நிறைந்து நின்றாய்! 10

---

# என் செய்வான் மாரன்!

(10—12—51)

மதுரை மா மன்னனை
    மாதவள் கேள்வனை
கதி தரும் கண்ணனைக்
    கருமுகில் வண்ணனை
துதி செயும் ஆயர்கள்
    துயரொழி தூயனை
மதியினால் வணங்குவன்
    மாரன் என் செய்வனே! 1

பாமையாள் கணவனைப்
    பார்வதி தமையனை
ஆமையாய் ஆழியுள்
    அவதரி ஆயனை
நாமமாயிரமுடை
    நாதனை வேதனை
ஜாமமும் எண்ணுவன்
    காமன் என் செய்வனே! 2

திருமகள் கொழுநனைத்
    திருமரு மார்பனை
அருமறைத் தலைவனை
    அம்புயப் பாதனை

வரைமகள் தமையனை
வள்ளியின் தகப்பனை
அறிவினால் வணங்குவன்
அனங்கன் என் செய்வனே! 3

கலைமகள் கணவனைக்
கமலமென் பூவிலே
உலகெலாம் படைத்திட
உதவிடும் ஒருவனை
நிலமகள் புருஷனை
நின்மல சோதியை
மலமற வணங்குவன்
மதனன் என் செய்வனே! 4

நந்தனின் மைந்தனை
நளின மென் கண்ணனைக்
கந்தனின் மாமனைக்
கணபதி மாமனைச்
சுந்தரி ஸேனையைத்
தந்ததோர் தந்தையைச்
சந்ததம் வணங்குவன்
ஸ்மரனும் என் செய்வனே! 5

காமனைச் சுட்டெரி
கண்ணுதல் நன்பனை
மாமனாம் கஞ்சனை
மாய்த்திடு மாயனை

பாமகள் நாமகள்
பணி செயும் பரமனை
நாம் தினம் எண்ணிடில்
ரதி பதி என் செய்வான்! 6

மதனனின் தந்தையை
மலரயன் தாதையை
மதுரை மா மைந்தனை
மரகத வண்ணனை
சதியெலாம் வென்றிடு
சற்குரு நாதனை
துதி செயத் துதிசெய
மன்மதன் மறைவனே!! 7

---

# இந்திரா மந்திரமே அருள்

(2—10—51)

கமலை கேள்வனே கருணை நாதனே
கமல பாதனே அமர போதனே!
விமல சந்திரன் சுந்தரக்குலம்
வந்துதித்ததோரம்பு ஜாட்சனே! 1

சிறையினில் உயர் பிறவி பெற்றவா!
சிறுவனுகியே உரு வெடுத்தவா!
மறை தரும் மலர்க்குமுத வாயனே!
மதுவனம் செலும் அமுத ஆயனே! 2

குழலிசை ஒலி குழக தூயனே!
குறுநகை புரி சிறுவ ஆயனே!
அழக ஆலிலை பள்ளி கொண்டவா!
ஆதி சேஷனைப்பாயல் கொண்டவா! 3

தோழ! தூமணி நீல வண்ணனே!
தாமரை மலர்த் தாள! கண்ணனே!
பாழும் மாயையைப் பீறும் சோதியே!
பால-பாலகி-பணியும் ஆதியே! 4

தலையிலே வளர் முடியும் பீலியும்
தழை மழை முகில் மதுர மேனியும்,

கலைசிறந்த மா முரளி கையிலே
கானப் பேரிசை குமுத் வாயிலே! 5

நிலவிலே சுடர் நீல மேனியும்
நிற்கும் வண்ணமும் காட்டும் நின்மலா! 6

புன்னை நீழலில் மின்னல் ஆடையாய்!
மன்னு வேய்ங்குழல் ஊதும் ஆயனே!
இன்னமோர் முறை எனது நெஞ்சிலே!
கண்ண களிநடம் பண்ணு! பாலனே!! 7

---

# காளிங்க மர்த்தன நர்த்தனம்

(16—3—49)

கரிய யமுனை எனும் நதி நடு தோழீ
சிறியவன் கரியவன் உருள் வன மாலீ
அரனயன் முதல் சுரர் அறிவறி சோதீ
பெரிய தோரருவினை புரிந்தனன் கேள் நீ! 1

இடைய இளஞ் சிறுவரனை வருங்கூடி
மடமையின் மயக்கொடு மடு தனக்கோடி
'மடமட' வென ஜல மருந்தினர் தேடி
உடன வருணர் விழுந்தனர், 'என்னேடி?' 2

கடுவிடப்பட முடி காளிய நாகம்
நடு வினிற்குடி கொளும் மடு அது, தேகம்
உடைய வரொரு வரு முயிருடன் மீள
விடுவன் கொல்? விஷப்புனல் அருந்தினர்மாள. 3

கருநிறத் திருமணி கமலச் செங்கண்ணன்
ஒரு புறம் மருவிய பலன் எனும் அண்ணன்
இரு வரும் விழைவொடு இளைஞரைக்காண
வரும் வழி உணர்ந்தனர் வஞ்சகன் செய்கை! 4

கருணைப் பெரு நிதியம் கண்ணனும் தாளான்
மறுகணம் கரைவளர் கடம் பினில் ஏறி
கரு முகில் கிரியினின் றிழிவது போல
உறுமிய அரியவன் மடுவினிற் பாய. 5

இதுவரை தனிமை யிலிருந்த அப்பாம்பு
முது கிடை முகில் வணான் திடும் எனப்பாய
'இது என்ன? எவர் செயல்? ஏதிந்தத்தீம்பு?
குதிபதர் எவன்' எனக் கனல் எழச்சிறி, 6

சத பட பணங்களும் சடுதியி லசைய
வித வித மணி வகை வெயில் எழ மின்ன
அதல சுதலம், வியன், தரைமகளதிர
அதி விரைவொடு அரிசிறு உடல் பற்றி, 7

நெடிய வனடி முதலணி மணி புனையும்
முடி வரை முடுகியே முறுக்கொள விறுக்கி,
கொடியவன் குமரனின் குரல்வளை பற்ற
பட முடியர வணை துயில் பவன் கண்டு, 8

'கல கல' நகை முகக் கண்ணனும் விண்ணில்
பல பல தாரகை மண்டலம், எண்ணில்
பல பதின் உலகொடு பாருடன் கீழும்
வில விலத்திட விசுவ உருவமும் கொண்டு 9

சுற்றிய வால் நுனி பற்றியோர் கையால்
மற்றெரு செங்கையிலற்புத வேணு
கற்களும் உருகிடக் கான மிசைத்துத்
தற் பரனற்புத நர்த்தனம் செய்தான்! 10

ஸ ரி க ம ப த நி ஸ ஸ நி த ப ம க ரீ
சரி சரி; கொடியவ, வினையயநுபவி

முறி, முறி முடிகளை, ஸ்மரி அரி நாமம்
ஹரி, ஹரி, ஹரி, என முரளியும் ஊத 11

நாரதர் தும்புரு தேவயாழ் மீட்ட
சாரதை சுதி சுர கானமும் கூட்ட
ஊர்வசி மேனகை அரம்பையும் வெட்கக்
காரணன் நாரணன் நாட்யம் புரிந்தான்! 12

பிரமனும் இருகை பொற்றாளமும் போடக்
குருகுகன் மத்தளம் கொட்டி முழக்க
உமை, ரமை, சுரர், முனி ரசித்துக் கொண்டாட
'திமி திமி' என ஹரி திரு நடம் செய்தான்! 13

'தத்திமி தத்திமி தகதிமி தாதை'
பித்த, பிசாச நீ பிறரை வதைத்தாய்
அத்தனை துன்பமும் அநுபவி என்று
உத்தமன் உத்தத நர்த்தனம் செய்தான்! 14

ராக-பாவ-ஸ்ருதி-தாள-லய-ஸ்வர
வேக விந்யாசமும் விறுவிறு நடையும்
ஏக லயத்துடன் எங்கணும் பொங்க
ஆகம நாயகன் அரவில் நடித்தான்! 15

காளியன் முடி மிசை கண்ணன் நடித்தான்
காளிந்தி மடு நடு காளியன் துடித்தான்
நீள்முடி மாதவன் நர்த்தனம் செய்தான்
மீளவும் மீளவும் முடிகள் துகைத்தான். 16

செஞ்சிறு பதமலர் குஞ்சிதமாக
வஞ்சகன் முடி தொறும் முடி தொறும் வேக
ரஞ்சக வியன் மணிச்சிலம் பொலி கொஞ்ச
விஞ்சையர் அஞ்சுற வனப்பொடு படிய 17

மரகத மார்பிடை மாலையும் புரள
சிறிய மயிலிறகு சிர முடிதுவள
அரைவடம் மின்னுடை அரையினில் தவழ
அரவணை நரஹரி ஆடினன் ஆட்டம்! 18

அற்புத நர்த்தனம் ஆயவன் செய்தான்
கற்பனை கடந்தவன் நிருத்தம் பயின்றான்
பற்களும் விழிகளும் மணிகளும் சிதறச்
சர்ப்பமும் சக்தி இழந்து தளர்ந்தான் 19

தீயுமிழ் நாவொடு தணல் எரி கண்ணும்
வாய் தொறும் குருதியும் வாரியடிக்கக்
காயமும் வல்லமையற்றுத் துடிக்கப்
பேயனும் மாயவன் மகிமையறிந்தான்! 20

இருபுறம் அவன் மனை இறைவனைக் கெஞ்ச
கருவமழிந்தவன் கண்ணனை எண்ண
'அருமை, அருமை,' என அனைவரும் கொஞ்ச
திருமகள் நாயகன் முறுவல் புரிந்தான்! 21

'பொறு பொறு பெரியவ அரியவ கண்ண
சிறியன்செய் பெரும் பிழை பொறுத்தருள் மன்ன

உரிய எம் கணவனுக்குயிரளி அண்ணல்
இருவரும் அரிவையர் இவன் மனே' என்ன 22

'அன்னேமீர் இருவரும் அஞ்சுதல் வேண்டா
இன்னமும் இவ்விடம் இருத்தலும் வீண்தான்:
பன்னகப்பதியுடன் மனைவியர் மக்கள்
பொன்னுரு இரமணகத்தீவு புகென்று 23

கண்ணன் சொல் தண்ணுரை காதினிற் கேட்டு
மண்ணினிற் படிந்தவன் மலரடி தொட்டு
'துண்' எனக்காளியன் சுற்றமும் தொடரக்
கண்ணினுக் கெட்டா இரமணகம் சென்றுன்! 24

சொல்லடி, சொல்லடி வல்ல எந்தோழி!
தொல்லேயுலகிது போற் கண்டதுண்டோடி?
இல்லே, இல்லேயடி எனதரும் சகியே
நல்லவர் நெஞ்சகமல்லதிந் நடனம் 25

மர்த்தன நர்த்தனம் அற்புதம் அன்றே?
கர்த்தனின் திரு நடம் காண்பது முண்டோ
உத்தமர் சித்தத்தில் நித்தமும் நிறையும்
சத்திய தத்துவ தாண்டவம் அல்லால்! 26

---

# ஆடுவதும் ஆட்டுவதும் அவனே

(10—11—52)

ஆடிடான் ஆட்டிவைப்பான்
அவன் பெயர் அரங்கநாதன்
ஆடுவான் ஆட்டுவிப்பான்
அம்பலத்தரசனம்மா!
பாடுவான் பதும நாபன்
பண்ணொலிக்கிசைய நின்று
ஆடுவான் அம்பலத்தான்!
அற்புதம் இதுபோல் உண்டோ! 1

தூங்குவான் ஒருவன் நித்தம்!
தூங்கான் கண் விழிப்பான் மத்தன்
ஓங்கியே உலகளப்பான் ஒருவன்;
மற்றொருவன் ஆங்கே
ஆங்காரத்துடனே அண்டம்
அழித்து ஸம்ஹரித்து நிற்பான்.
பாங்குடன் ஒருவன் ஆடப்
பாடுவான் ஒருவன் அம்மா! 2

கடலிலே காலை நீட்டிக்
கண்ணுறங்குவான் ஒருத்தன்
அடமுடன் மலையை விட்டு
அசைந்திடான் மற்றொருத்தன்

குடமடை பாம்பின் மீது
    கூத்தாடுவான் ஒருத்தன்
படமெடு பாம்பு காணப்
    பரதம் ஆடுவான் ஒருத்தன்! 3

நீலமாய் நீண்டு நிற்பான்
    நெடுங்கடல் மீதொருத்தன்
கோலமா நெருப்புக் குன்றாய்க்
    குமுறுவான் மற்றொருத்தன்
தாளமும் ஒருவன் போடத்
    தாண்டவம் செய்வான் நிருத்தன்
காலமாவான் ஒருத்தன்
    காலனைக் கொல்வான் பித்தன். 4

சக்கரம் சுழற்றி நின்று
    சண்டை செய்வானொருத்தன்
உக்கிர மழுவைப் போரில்
    உருட்டுவான் மற்றொருத்தன்
பொக்கெனப் புல்கி ஒன்றாய்
    இருவரும் மருவிநிற்பர்
அக்கணம் மலரும் சோதி
    அரிஹரன் என்பார் பூவில். 5

காப்பதோர் சக்தி என்றால்
    அழிப்பதோர் சக்தியாகும்

மாய்ப்பதோர் சக்தி என்றால்
படைப்பதோர் சக்தியாகும்
காப்பதும் அவனே பின்பு
கடாஹங்கள் அழித்துயாவும்
மாய்ப்பதும் அவனே பூவில்
மாலொடு அரன் ஒன்றாகும்!! 6

---

# கண்ணன் வண்ணம்

(23—8—50)

காலைக்கதிரவனோ? கண்ண—நின்
 கஸ்தூரி திலகம்
மாலை மதியம் கொல்லோ—மாதவா
 மலர்ந்த நின் வதனம். 1

மேகத்தின் மின்னொளியோ—மாதவா
 மேகலைப்பட்டாடை?
நாகத்தின் நன் மணியோ—நாரண
 நளினக்கண் ஒளிதான். 2

நீலமணிமலையோ?—கண்ண நின்
 நெடுந்திருவுருவம்
ஆலம் பொழி அமுதோ—அச்சுதா
 அன்பொளிக்கண்வீச்சு. 3

ஏழ்கடல் ஆழ் முத்தோ—ஈச நின்
 இனிய பல் வரிசை?
சூழ் பவளக்கொடியோ—நினது
 சிவந்த நல்லதரம். 4

நீலக்கருவண்டோ—நினது
 நீள் சுருள் சேர்குழலும்
கோலக்குளிர் நிலவோ—குமரா
 குறுமுறுவல் ஒளி. 5

முரசதுந்துபியோ—நினது
 முழங்கிடும் குரல்தான்
சரசகாவியமோ—சாரங்கா
 சரீரத்தின் இளமை. 6

அரசயானை கொல்லோ—அன்ப நின்
 ஆடியசை நடையும்
வரிசைத் தாரகையோ—மார்பினில்
 வளர் வனமாலை. 7

திவ்வியபூமி கொல்லோ—தேவ நின்
 திருவடி நிழலும்
அவ்வை தமிழ்ச்சுவையோ—அமரா
 அருள் பொழி நோக்கு. 8

மையல் தரும் முகிலோ—மௌலியில்
 புரள் மயிற் பீலி
கையில் இசை முரளி—கானத்தின்
 கலைச்சிகரம் கொல்லோ? 9

கதம்ப நீழலடி—இந்திரன்
 கற்பகக் பூங்கொடியோ?
சதங்கைப் பாதமலர்—சற்சனர்
 இதயத்தாபரணம். 10

வளைந்த நீள் கழுத்தும்—வெண்மையாம்
 வலம்புரிச்சங்கோ?

கஜள பொழி தோள்கள்—கண்ணனே
காஜள திமில் கொல்லோ? 11

அசையும் ஆல் இஜலயோ—ஆயனே
அழகிய வயிறும்.
விசைகொள் வான்சுடரோ—காதினில்
விளங்கு குண்டலங்கள். 12

ஆதிசேடன் உடலோ—அரையில்
மேகஜலயா பரணம்
சோதிமணி விளக்கோ—நினது
சுந்தரப்புன் முறுவல். 13

கடைந்த நல்லமுதோ—நினது
கருஜண சேர் வடிவம்
அடைந்திடும் வீடோ—நினது
ஆனந்த மெய்யுருவம். 14

பாரதி பாடல் கொல்லோ—பரமா
பரந்த மெய்க்கருஜண
சாரதியானவனே—மனத்துச்
சஞ்சலம் தீர் பரனே. 15

---

# போற்றுகிறேன் பரமா

(21—8—50)

பீதாம்பரமணி பரனே நின்னைப்போற்றுகிறேன்.
பீலியும் மௌலியும் புரள்குழலழகா போற்றுகிறேன்
நாதாந்தப்பொருள் ஒலியே ஒளியே போற்றுகிறேன்
நான்மறை தந்திடு நான்முகன் தந்தாய்
போற்றுகிறேன்.
வேதாந்தக்கடல் அமுதே அரசே போற்றுகிறேன்.
வெண்ணெய் சுவைத்திடு செங்கனிவாயா
போற்றுகிறேன்.
போதாந்தத்தினைப்பொழி இசைக்குயிலே
போற்றுகிறேன்.
புண்ணிய மதுவனம் நண்ணிய மாதவ
போற்றுகிறேன். 1

பிருந்தாவனம் வளர் பெம்மான் எம்மான்
போற்றுகிறேன்.
பேரருள் கிரிதர பயங்கர நரஹரி போற்றுகிறேன்.
சிந்தாகுலம் தீர் தந்தாய் எந்தாய் போற்றுகிறேன்.
சேவடியாலொரு மூவுலகளந்தவ போற்றுகிறேன்.
நந்தானந்தா, நாரண, பூரண போற்றுகிறேன்.
நாதச்சுடரே நான் மறை முடிவே போற்றுகிறேன்.
மந்தாரம் புனை மலர் மணி மார்பா போற்றுகிறேன்
மீரா, கோதை மெச்சிடு மாதவ போற்றுகிறேன். 2

கதம்ப மரத்தடி இசைபயில் குயிலே போற்றுகிறேன்.
கல்தனிலமர்ந்து குழலிசை குமரா போற்றுகிறேன்.
வித வித நாதம் பொழிகலையரசே போற்றுகிறேன்
விண்ணவர் வியந்திட மிருதங்கம் ஒலிப்பவ
போற்றுகிறேன்.
அதிமதுரமதாய் நடனமிடுபரம போற்றுகிறேன்.
அன்பர்கள் நெஞ்சில் அமர்ந்து நடிப்பவ
போற்றுகிறேன்.
நிதம் புது லீலைகள் செய்திடும் மாயா
போற்றுகிறேன்.
நீல மணிச்சுடர் நிறைமறை வாயா
போற்றுகிறேன். 3

மாதவ, யாதவ, மாமகள் நாயக போற்றுகிறேன்.
மணி முடிச்சேடன் உடல்கண் வளர்வாய்
போற்றுகிறேன்.
மாதுமை சோதர, மதுரையின் தலைவா
போற்றுகிறேன்.
மாநில மதனில் ஆனிரை மேய்த்தாய்
போற்றுகிறேன்.
சீதர, கேசவ, சின்மயக்கடலே போற்றுகிறேன்.
சீதள கேரள கடற்கரை துயில்வாய் போற்றுகிறேன்.
பூமகள் துணைவா, பொன்மகள் கணவா
போற்றுகிறேன்.
கோமகனே கலைமா மகனே அருள்
போற்றுகிறேன். 4

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



கஸ்தூரிகமழ் கருமணி மலையே போற்றுகிறேன்.
காவிரிபாய் எழில் சீரங்கத்தரசே போற்றுகிறேன்.
விஸ்தாரப்புகழ் வெங்கட மலையாய் போற்றுகிறேன்.
வர்க்கலை நற்கரை நிற்கும் ஜனார்த்தன
போற்றுகிறேன்.
அச்சுதபண்டரி புரஹரி ரங்கா போற்றுகிறேன்.
அற்புதச் செங்கலில் நிற்கும் பரம் பொருள்
போற்றுகிறேன்.
பச்சை நிறத்தாய் பட்டுடை யணிவாய்
போற்றுகிறேன்.
பூரிப்பதிவளர் பூஞ்சகந்நாதா போற்றுகிறேன். 5

கானமிசைப்பாய் கானில் நடிப்பாய் போற்றுகிறேன்.
கலையை உகப்பாய் கபடம் உதைப்பாய்
போற்றுகிறேன்.
ஞானமும் மோனமும் நன்கு உரைப்பாய்
போற்றுகிறேன்.
நாயக, தேவகி சிறை விடுவிப்பாய் போற்றுகிறேன்.
பானகத்துரும்பாம் பதர்களை யழிப்பாய்
போற்றுகிறேன்.
பாடலு மாடலும் பக்தியுமுகப்பாய் போற்றுகிறேன்.
நான்' எனதென்ற அஞ்ஞான மொழிப்பாய்
போற்றுகிறேன்.,
நனவிலும் கனவிலும் நினைவிலும் நினையே
போற்றுகிறேன். 6

நீலமணி! மலையாய் நேமி நெடும் படையாய்
கோலக்குழல் இசையாய் கொஞ்சிடு மென்மொழியாய்
பாலப்பருவத்தாய் பால்மதிபோல் முகத்தாய்
பாலைக்கருள் புரியும் பரமா நினதபயம் 7

# பால மணி நீலா

(27—10—51)

கஸ்தூரி ரங்கா! காவேரி ரங்கா!!
கனவிலே வந்தாண்ட காந்தி மிகு ரங்கா!
பச்சைமணி ரங்கா! பரிமள ரங்கா!
பவள மணிக்குமுத வாய்ப்பதி பாண்டு
ரங்கா! 1

அச்சமழிரங்கா! அழகு மிகு ரங்கா,
அன்னை திருமாது வளர் பொன்மலர் மார்பா!
நச்சரவில் பள்ளிகொளும் நாதஸ்ரீ ரங்கா!
நின் நளின மலர்ப் பாதமன்றி வேறுதுணை
இங்கார்! 2

கண் குளிரக்கருணைபொழி கருமணி ரங்கா!
கருடாஸனத்தில் வளர் கந்தன் பணி ரங்கா!
பண்ஒளிர உள்நிறையப்பாடல் பொழிரங்கா,
பரவுவார் இதய மெல்லரவில் துயில்ரங்கா! 3

இரவிலே வந்தென்னை எடுத்தாண்ட எந்தாய்
'இனி ஏதும் துயர் இல்லை' என்றதோர்
தந்தாய்
உறவு வேறுனையன்றி யாருமிலை கண்டாய்!
பரவுவேன் பாதமலர், பால, மணி நீலா. 4

---

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.

# அங்கையாலணைத்தருளிய பங்கயச் செல்வி!!

(31—7—52)

சங்கு 'சல சல'க்கும்
சமுத்திரத்து நல்லமுதே!
எங்கள் குலக்கொழுந்தே!
எம்பிரான் நாயகியே!
தங்கக் கொடிமணியே!
தருமச் சுடரொளியே!
பங்கயத்து நாயகியே!
பாலகி ஸௌபாக்கியமே! 1

மதியினுடற்பிறப்பே!
மதனனை ஈன்றவளே!
விதியினருந்தாயே!
விமலனின் காதலியே!
மதிவதன மாமகளே!
மங்கை மலர் மகளே!
இதுவும் புதுமையடீ!
என்னரசி! பொன்மகளே! 2

அந்திச்சமயத்தே
அழகிய தடாகத்தில்
இந்து உதிக்கையிலே
இளம் தென்றல் வீசையிலே!
சுந்தரப் பட்டுடுத்தி
ஜோதிமயமானதொரு
ஸௌந்தரியத் தாமரையில்
தாயே கொலுவிருப்பாய்! 3

சமுத்திரம் பொங்கையிலே
சந்திரனுதிக்கையிலே

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



அமுதம் கிளம்பையிலே
அல்லி மலருகையில்
குமுதம் விரிகையிலே
குளிர் காற்று நிறைகையிலே
அமைதியாய்த் தாமரையில்
அழகாக வீற்றிருப்பாய்! 4

அந்திமந்தாரை மணம்
அங்குமிங்கும் பொங்கியெழ
இந்திரன் மதகளிறு
இன் கங்கை நீராட்ட
துந்துபி முழங்கி எழ
தேவ கானம் பொழிய
மந்தகாசத்துடனே மலர்
மேல் கொலு இருப்பாய். 5

பொற்றாமரையினிலே
பூரணியே நின்றிருப்பாய்!
சிற்றுடைப்பட்டுடுத்தி
சிற் சுகமாய் நின்றிருப்பாய்!
வற்றாத தாமரையை
வளைக்கையில் கொண்டு நிற்பாய்!
சுற்றும் சுடர்வீசி
சுந்தரியே! நின்றிருப்பாய். 6

ஆனந்தப் பொய்கையிலே
அறிவென்னும் தாமரைமேல்
தானந்தமான தொரு
தயைத் தென்னஞ் சோலையிலே!
கானமெனும் தோகை
களி நடனம் செய்து வர

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



மோனமென்னும் அன்னம்
முத்துப்பொறுக்கி வர. 7

ஞானமெனும் யானை
நற்பக்தி நீராட்ட
தேனின் இனியவளே!
தெய்வத்திருமகளே!
மானமரும் மென்னேக்கி!
மாலருந்தும் பாலமுதே!
வானப் பரஞ்சுடரே!
வண்ணக்கொலு இருப்பாய்! 8

உன்னை நினைத்தன்றோ!
உருகுவேன் உத்தமியே!
என்னவென்று கேளாயோ?
ஏறெடுத்துப் பாராயோ!
கன்னியமும் சேயின்
கவலையைத் தீராயோ!
அன்னையுருக் கொண்டாய்
அலறலைக் கேளாயோ! 9

பொன்னும் புது உடையும்
பூமிதனில் யான் வேண்டேன்
தின்ன அருசுவையும்
தீவனமும் யான் வேண்டேன்
சொன்னப்பணியணிகள்
சுக போகம் யான் வேண்டேன்!
மின்னுமணி மாளிகையும்
மிளிர் நிலமும் யான் வேண்டேன்! 10

சாகா வரம் வேண்டும்
சலியா மனம் வேண்டும்
நோகா உடல் வேண்டும்
நுண்ணறிவு தான் வேண்டும்
பாகாம் மொழி வேண்டும்
பாபுனையும் திறன் வேண்டும்
ஏகாக்கிர சிந்தை
என்றென்றும் தான் வேண்டும் 11

இந்திரிய ஜயம் வேண்டும்
இணையற்ற பலம் வேண்டும்
மந்தருடன் கூடாத
மனஉறுதி தான் வேண்டும்
சொந்த நலம் நாடாத
சிந்தைத்திடம் வேண்டும்
இந்திரையே தேவி!
இவையாவும் தருவாயோ! 12

வண்ணக்கலை மடந்தை
ஒண்முத்து மாலை தந்தாள்
எண்ணத்திறன் தந்தாள்!
எழிற்கவிதை நலம் தந்தாள்!
பண்சேர் மொழி தந்தாள்!
பாடும் திறம் தந்தாள்!
எண்ணற்கினியவளே
என்ன தருவாய் நீ! 13

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



என்று நான் எண்ணி
இள முறுவல் பூக்கையிலே
இன்று நான் பெற்றதொரு
இன்பமதை என் சொல்வேன்!
குன்று மலரழகி
'கொல்' எனவே தான் சிரித்தாள்!
'நன்று நன்று பாலகியே
நம்மை நீ உணர்ந்த விதம்!' 14

'புத்திதனில் உறைவாள்
புலமைக் கொருஅரசி!
முத்து மாலை தருவாள்
மோகன வாணியவள்!
சித்தி நிதம் பொழிவாள்
சகல கலா வல்லி
சக்தியருட் கவிதை
சரசுவதி தந்திடுவாள்!' 15

'இத்தினம் எந்தனை நீ
'என்ன' என வினவுகிறாய்!
கத்திச் சிரிக்கின்றாய்
கன்னம் குழிவிழவே!
'ஒத்து வராள் மாமி
மருகியிடம்' என எண்ணும் உன்
புத்தியை என்னுரைப்பேன்
புதுமைக்கவிப் பெண்ணே!' 16

சித்தமலர்த்தாமரையில்
நித்தம் குடி இருப்பேன்!
பக்திச் செல்வம் அளிப்பேன்
பண்புப் பொருள் அளிப்பேன்!
முக்தி எனும் வைகுந்தம்
முகுந்தன் பதம் அளிப்பேன்!
தித்திக்க உன்னுளத்தே
நிருத்தம் புரிந்திடுவேன்!' 17

'எப்போதும் உன்னிடமே
இணைபிரியாதிருந்திடுவேன்!
முப்பது வயதுக்குள்
முழுப்புகழும் தந்திடுவேன்!
முப்போதும் உந்தனுடை
மும்மலங்கள் போக்கிடுவேன்!
அப்போதும் இப்போதும்
எப்போதும் காத்திடுவேன்!' 18

'அழகு அளித்தவள் யான்
அதைஉணரச் செய்தவள் யான்!
பழகியும் என் தன்மை
பாலே அறிகிலையோ!
தழுவியணைத்திடுவேன்
தனயை' எனவந்தாளே!
எழுகமலப்பூ நீத்து
என்முன்னே வந்தாளே! 19

செந்தாமரை நீத்துச்
சேர்த்தணைய வந்தாளே

'இந்தா! மணியாரம், தரி'
என்று தந்தாளே!
நந்தா விளக்கன்னே!
நளினம் விட்டு வந்தாளே!
எந்தாய்! எனை ஈன்ருள்
எனக்கருள வந்தாளே! 20

கமல மலர் நீத்துக்
காலடி எடுத்து வைத்தாள்!
அமல கரம் நான்கால்
அன்னையணைத்து நின்ருள்!
விமல மணியாரம்
வேண்டியணிவித்தாளே!
கமல முகத்தன்னை
கட்டித்தழுவி நின்ருள்! 21

பெற்றேன் பெறும் பேறு!
பெண்களிலே பாக்கியவதி!
நற்ருமரைத்தேவி
நங்கை எனையாண்டு கொண்டாள்!
கற்றேன் கலை, கல்வி
கலை மடந்தை உறவானுள்
பற்றறுத்தேன்! பக்தி செய்தேன்
பங்கயத்தாள் வந்தணைந்தாள்! 22

---

# வரம் தா இந்திரையே!!

(8—8—52)

செந்தாமரை வாழ்வாள் நிறம்செய்யாள்
மலர்க்கையாள்,
பந்தார்விரலழகி, பசும் குழலி,
இசை மழலி,
நந்தாவிளக்கனையாள், நளிர் கடலில்
உதிமணியாள்,
எந்தாய் எனை வந்தாண்டனள்
இன்றே சுகம் கண்டேன்! 1

அழகுக் கடலுருவாள் திகழ் அருமைப்
பெயர் திருவாள்;
மழைவண்ணனைத்தழுவும் கொடி இடையாள்
பட்டுடையாள்;
குழைகுண்டலமசை செம்முக மதியாள்
நவநிதியாள்;
இழை மேகலைத்திரு ஆண்டனள்
இன்றே துயர் விண்டேன்; . 2

கருணைக்கடைக்கண்ணாள்; கடல்
அமுதச்சுடர்ப் பெண்ணாள்;
இருதாமரைவளர் பங்கயக் கரத்தாள்
மணிநிறத்தாள்;
வரதாபயம் பொழி நாயகி
வளரம்புய மலராள்

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



திருமாமணி எனையாண்டனள்
இன்றே சுகம் கண்டேன்! 3

அமைதிச்சுடர் வடிவாள், பொழி
அமுதக்கலை உருவாள்;
இமையோர் பணி மணி நூபுரக்
கழலாள், நிறம் தழலாள்;
ரமை, அம்புஜை, வசுதை, தரை
எனும் சுந்தரப்பெயராள்
எமையாண்டனள் இறைமின் கொடி
இன்றே துயர் விண்டேன்! 4

மணிகிண்கிணி யணிகங்கண
ஒலிமங்கள உருவாள்,
அணிமேகலை இணை நூபுர
மணிகொஞ்சிடு ரமணி,
பணிவானவர் மகளிர் குழு
முடி தோய் மலரடியாள்;
ரண சஞ்சல ஜயமங்கள
ரமை யாண்டனள் எனையே! 5

திருவே! சுடர் உருவே! திகழ்
அருமா மறைத்தருவே!!
கருமாமுகில் மலர் மார்பிடை
வளர் மின்கொடி வடிவே!!

அறிவே திகழ் அடியாரிடம்
அழகாய் வளர் முடிவே!
இருபைங்கழலிணை தந்தெனை
இன்றாண்டது மறவேன்!! 6

மறவேனடி மலர் சுந்தரி!
மதுரக்கடலமுதே!
வரலக்குமி! வரதே!
உயர் பரதேவதை பரையே
இரு வேதனை தனை நீக்கினை!
துயர் போக்கினை! என் முன்
சுர நாயகி! குரல் தந்துடன்
சுகம் தந்த செந்திருவே! 7

இதயக்கடல் வளர் மாமணி!
இறைவீ! எந்தன் தலைவீ!
பதுமத் தெழிலரசி! பகர்
பலமா நிதி முதல்வீ!
சுதிகள் பல பரவும் குளிர்
சசிஸோதரி! ரமையே!
நிதியாமுனைத்துதி செய்கலை
கற்றேன் புகழ் பெற்றேன்! 8

அமராவதி அரசும் வளர்
அலகாபுரி நிதியும்;
சமராபதி; அரவின் பதி
அவன் ஆள் போகவதியும்;

உமை நாயகன் மகிழ் கேசவன்
மனையே எமதனையே!
தருவாயெனின் அவை வேண்டிலன்!
தருவாய் கழல் ரமையே!! 9

"இந்தா" எனத்தந்தாலுமே
இந்திரன் புரி வேண்டேன்!
"வந்தாள்" என வரம் தந்தாலும்
வைகுந்தமும் சீந்தேன்!
சந்த்ராம்ருத-சிந்தாமணி
மகிழ் ஸோதரி! திருவே!
எந்தாய் உனை வந்தித்திட
வரம் தா இந்திரையே!! 10

---

# பாலா-நாயகி சரணம்.

(8—8—52)

இந்திரை சுந்தரி அம்பிகையே!
எங்களை ஈன்ற பரம்பரையே!
அந்த மிகுந்த வசுந்தரையே!
ஆதி பராபரி தாள் சரணம்! 1

அம்புய மலர் வளரங்கனையே!
அன்னை மகிழ்வதரங்கனையே!
கொம்பனையே குலமாமணியே!
கோமள நாயகி தாள் சரணம்! 2

கோமள மென்கொடி கோகிலமே!
கஞ்சமலர் வளர் அஞ்சுகமே!
சியாமளன் மகிழ் உயர் மடவனமே!
சந்த்ரஸகோதரி, தாள் சரணம்! 3

அருமறை பரவிடு மா மயிலே!
அம்புயச்செல்விமென் பூங்குயிலே!
திருமகள் எனும் ஒரு சுரமகளே!
தெய்வசிகா மணி தாள் சரணம்! 4

வைகுந்தம் வதி பொன் மகளே!
வனஜமிசை மகிழ் செம்மகளே!
அம்முகுந்தன் மகிழ் மா மகளே!
அம்ப! தயாபரி தாள் சரணம்! 5

கருங்கடலலை உதி செம்மணியே!
கருங்குயில் வள்ளிஈன் பொன் மணியே
தருமசிகா மணி தரைமகளே!
தாய் எனும் மாயே! தாள் சரணம்! 6

சந்திரன் உடன் வரு சுந்தரியே!
கந்தமணம் பொழி காரிகையே!
செந்தாமரை மலர் மாளிகை யாய்!
எந்தாய் ஈசுவரி தாள் சரணம்! 7

ராதா, ருக்மிணி, பாமை நீ
கோதை, மீரா, பூமா நீ
ஸிதா, பார்வதி, சரசுவதி நீ
பாலா நாயகி தாள் சரணம்!! 8

---

# நீலமாலை

(20—11—52)

எண்டிசை காவலர் எண்மரும் நிற்க,
வண்டடைசை மாலையன் நான்முகன் நிற்க,
அண்டரும் அசுரரும் கண்டு பிரமிக்க,
ஒண்டொடி தோன்றினள் ஒண்கடலிடையே. 1

பங்கயமலர்மிசை பாவை, ஓர் பூவை,
திங்கள்முகந்திகழ் அமுதத்தோகை,
தங்கநிறத்துரு, தாமரைக்கண்ணுள்
மங்களமணிச்சுடர், மங்கையர்திலகம், 2

செவ்விய மேனி, சிவந்த மெல்லதரம்,
கவ்வியகுழல் முகில், கவிமதிவதனம்,
திவ்வியச்சுடரொளி திகழ்திருவடிவம்,
பவ்வியஉருவம், பாற்கடல் அமுதம்; 3

கடலலை கூந்தல், கைஎழிற் காந்தள்,
நடைமட அன்னம், நளினமென்கன்னம்,
புடவைசெம்பட்டு, பூந்துகிற்கட்டு,
தடமணிமார்பு, தளிர்க்கரம் நான்கு, 4

செஞ்சிலம்பசையும் பஞ்சடிப்பதுமம்,
கொஞ்சிடு வாணி, கோமளவேணி,
அஞ்சுகச்சாயல், அங்கதிர் மூரல்,
மஞ்சுளவதனம், மதுபொழிநயனம், 5

துடிஇடைத்தோகை, தோள்மணிமூங்கில்,
பிடிநடைப்பாவை, பேரருட்பார்வை,
கொடிதுவள்மேனி, கொடிமணிநாசி,
கொடிவிற்புருவம், குலமகள்வடிவம், 6

பூத்துக்குலுங்கிடு பொற்கொடிவடிவம்,
வார்த்துச்சமைத்த தோர் வளர் மணிப்பதுமை,
ஆர்த்திடு பணி மணி அசைந்திட எழுந்தாள்,
பார்த்தனர் அனைவரும் பாற்கடல் நடுவே, 7

பாற்கடல் நடுவில், பங்கயமலரில்,
சீர்த்திருநின்றாள்; தேவர்கள் கண்டார்,
ஆர்த்தன முரசம், ஆர்த்தன சங்கம்,
நாற்புறம் நோக்கினள் நன்மலர் மங்கை. 8

இருவிழி சுழற்றி இறைவியும் நோக்க
வெருவினன் தினகரன்; வெட்கினன் சந்திரன்;
உருவழிந்துருகினன் கர்விமாமதனன்
இருசுடர் ஒளிதனில் திணறினன் இந்த்ரன். 9

தனத்திமிர் மிகுந்த தனபதி தளர்ந்தான்;
இனத்திமிர் மிகுந்த யமன் மனமுடைந்தான்;
கனஜல நாயகன் கண்டு மருண்டான்;
வனபதிவாயுவும் வல்லமை குறைந்தான். 10

அக்கினி சொக்கினன் ஆணவமழிந்தான்,
திக்கின்காவலர் வெட்கிமருண்டார்,

சுக்கிரன், செவ்வாய் உக்கி உடைந்தார்,
மிக்குளயாவரும் திக்பிரமைகொண்டார். 11

"அமுதோ? கனலோ? அயிலோ? வெயிலோ?
குமுதச்சுடரோ, குவலய விழியோ?
அமைமின் வெட்டோ? அருமணிப்பொட்டோ?
இமைமின் பொறியோ? இருமா எரியோ? 12

மானோ, வண்டோ, மாவடுத்துண்டோ?
தேனோ பாலோ, தீங்கனிச்சுவையோ?
ஊனார் உயிரோ, உயிரழி நஞ்சோ?
வான்வாழ்கதிரோ? சுடரோ, மீனோ? 13

தாமரை மலரோ, தண்ஒளிமணியோ?
சாமளப்பொழிலோ, சாந்தியின் எழிலோ?
கோமளப்பூம்பொழில் அல்லியந்தளிரோ?
காமன்கைக்கணையோ, கருணையங்கடலோ? 14

மாமறைப்பொருளோ, மரகதத்திடலோ?
ஸோமனின் ரஸமோ, சுந்தரக்கவியோ?
ஏமக்கனியோ, ரத்தினக்கடலோ?
மாமகள் விழியோ" என அவர் மருண்டார். 15

சிந்தாமணியை வென்றது சிறப்பில்,
சந்திரன் ஒளியை வென்றது எழிலில்,
அந்தவிஷத்தினை வென்றது குணத்தில்,
நந்தாவிளக்கின் நயனம் கண்டீர். 16

தேவப்புரவியை வென்றது வெளுப்பில்,
மூவர் நிறத்தையும் வென்றது ஜொலிப்பில்,
காமதேனுவை வென்றது கருணையில்,
மாமகள்நோக்கு மா நிலத்தீரே. 17

ஆயிரங்கோடி அப்ஸரஸ் உடனே
தூயவள் எழும்பிடத்தோன்றிய ஜோதி
மா இருள் விழுங்கி மா நிலம் காத்து
ஆயிரமாயிரம் அண்டம் கடந்தது. 18

முப்பத்து மூன்று கோடியத் தேவர்
அப்பொழுதவளை அடையவிரும்பி
"இப்படி வா" என இங்கிதம் செய்தார்,
துப்பிதழ்க்கன்னி துணுக்கமடைந்தாள், 19

"இப்படிப்பெண்களைக்கண்டு இளிப்பவர்
எப்படிதேவர்" என்றுவியந்தாள்
தப்பிதம் ஏதும் இல்லாப்பசுபதி
ஒப்பனையுடனே நிற்பதும் கண்டாள். 20

இந்திரன் இளித்தான் இருகைவிரித்தான்,
இந்திரை பார்த்தாள், இள நகை பூத்தாள்,
"மந்தர்கள் கும்பல், மடையர்கள் கூட்டம்,
வந்தனைக்குரிய வண்மகன் இல்லை" 21

'அழகுஇருந்தால் ஆற்றலும் இல்லை,
பழகிய பண்பும் பதிவிசும் இல்லை,

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



தழைதனமுண்டேல் தயை, அறம் இல்லை
விழைவது எவரை, வேட்பது யாரை?'' 22

என்றவள் எண்ணி, எண்டிசை நோக்கி,
நின்றனள் நிமிடம் கண்டனள் காட்சி;
ஒன்றும் விரும்பா உத்தமஉளத்தான்,
குன்றுமணித்தோள், கொண்டல் நிறத்தான், 23

அமுதம் கடைந்த அருமணிப்புயத்தான்,
குமுதக்கடைவிழி தயைபொழிதிறத்தான்,
சமரஸபாவச் சின்மயமூர்த்தி, .
இமையவர் பெருமான் ஏலக்குழலான், 24

கண்கவர்அழகன், கருவமிலாதான்,
மண்விண் ஆண்டும் மதம் பிடியாதான்,
திண்புயச்செம்மல், திருமால் நெடியான்,
பெண்உயர்வறிவான், பேடிமை இல்லான், 25

ஆற்றல் மிகுந்தான், அறவழிச்செல்வான்,
தோற்றம் இளையான், தொன்மை மதியான்,
வேற்றுமையறியான், வெற்றுரைபேசான்,
நாற்றநறுந்துழாய் நாரணன் கண்டாள். 26

அன்னையும் நோக்க அண்ணலும் நோக்கினன்
கன்னியும் நோக்க கண்ணனும் நோக்கினன்
முன் அவள் நோக்கமுகுந்தனும் நோக்கினன்;
கன்னிகை நோக்கக்கார்முகில் நோக்கினன்; 27

மங்கையும் நோக்கமாயவன் நோக்கினன்,
நங்கையும் நோக்க நாரணன்நோக்கினன்;
பைங்கிளி நோக்கப்பரமனும் நோக்கினன்;
மங்களநோக்கில் மணவினைமுடித்தார். 28

பங்கயச்செல்வி பஞ்சடி பெயர்த்து
எங்கள் நாயகன் இருப்பிடம் வந்து
சங்கைஇலாது சராசரம் காண
செங்கையின் மாலை செம்மலுக்களித்தாள். 29

குவலய மாலை கோவிந்தன் கொண்டான்,
சுபஜயமாலை சீதரன் கொண்டான்,
தவமுடையாளைத் தன்மணிமார்பில்
குவலயக்கண்ணன் கொண்டு மகிழ்ந்தான். 30

மாலையளித்தவள் மார்பில் நிலைத்தாள்,
நீலமாலையால் நெடுமால் பெற்றாள்,
ஆல்இலை துயில் பதி அன்பால் பெற்றாள்,
பாலையின் பாக்கியம் பகரவும் போமோ? 31

ஆலமுண்டவன் கண்டுமகிழ்ந்தான்;
சீலமுடையவன் ஜயமகள்பெற்றான்;
நீலமாலை யருள் நேர்மையன்பெற்றான் ;
பாலையையடைந்தான் பரன் துறவாலே. 32

---

# கனகச் சுடர்க்கொடி

(24—7—52)

கண்ணன் மணந்த காரிகையே,
வண்ணத் தாமரை பொன்மகளே,
எண்ணத் தித்திக்கும் இன்பமுதே,
பெண்மணிபூ மகளே சரணம்! 1

பாற்கடல் மகளே கடலமுதே,
நாற்கரத்திருவே; நல்லழகே,
சீர்த்திருமகளே; செங்கனிவாய்ப்
போர்த்தொழில் மாமகளே; சரணம். 2

செல்வத்திருவே, ஜயமகளே,
பல்கலை மகளே, பார் மகளே,
நல்லன நல்கும் நளினமலர்ச்
செல்வி, செழுந்திருவே சரணம்! 3

திருமாமகளே, பெருமகளே,
பெருமாள்மகிழும் மனையாட்டி,
மறையோன், மதனைத்தந்தவளே,
நிறை மாமதியின் இளந்தங்காய்! 4

சந்திரன் தன்னுடன் பிறந்தவளே,
சுந்தரி சேனையை ஈந்தவளே,
மந்தகாசமுக வள்ளிதனைத்
தந்த தயாபரி தாள் சரணம்! 5

Funding: Tattva Heritage and IKS-MoE. Digitization: eGangotri.



தேவாமுதத்தின் திருத்தமக்காய்
மூவா முழுமுதலே, கனியே
பாவாய், பங்கயமாளிகையாய்
காவாய், கழலிணையே, சரணம்! 6

அழகுக் கடலே, அற்புதமே,
குழகனைத் தழுவிய கொழு கொம்பே
தழை முகில் வண்ணன் மகிழ் அன்பே
செழுமலர்ச் செம்மகளே, சரணம்! 7

தாமரை வீடு, மதி அண்ணன்
காமன் மைந்தன், கடல் அப்பன்
சேம நல்லமுதம் திருத்தம்பி
பூ மகள் முகமலர்க்குவமையிலை! 8

சாமள வண்ணன் சரஸ பதி
சாமளை மருகி வள்ளி மகள்
கோமளக் கருங் கடல் பெற்றவளும்
மாமகள் விழி இணைக்கிணை ஏது! 9

வேலும் மருகன் ஆயுதமாம்
சூலம் நாத்தி கணவன் படை
ஆலம் அவன் கழுத்தாபரணம்
பாலையின் பெருவிழிக்கு வமையிலை! 10

கருணை முகிலோ, கணவனுடல்
அரிதாம் அமுதம் அருந்தம்பி

பெரும் பாற்கடலும் பெற்றவனே
திருவாள் விழியருட் கீடில்லை! 11

பூந்துகில் புனைந்த பூமகளே
ஏந்திழை எமையாள் பெருமாட்டி
ஆந்துணை நீயன்றி வேறில்லை
மாந்தருள் பாவி என்போலில்லை! 12

தாயே, மாதவி, தாள் சரணம்
நீயே ஆதரி நின்மலையே
மாயே, மாயன் மனை வாழ்வே
சேயே நம்பினன் சேவடியே! 13

பதுமத்தாளே, பைங்கொடியே,
சது முகன் தாயே ஜலமணியே
பதும நாபன் மணி மார்பில்
வதியும் வாழ்வரசீ சரணம்! 14

புண்ணியப் பேறே, புது வாழ்வே
தண்ணருட்டாமரை தங்கக் கொடி
எண்ணிய யாவும் இசைந் தருளும்
சண்முகன் மாமி தாள் சரணம்! 15

கணபதி போற்றும் கஜலக்ஷ்மி
வணமிகு மணி நிற வரலக்ஷ்மி
துணை யினி வேறிலை சுபலக்ஷ்மி!
அணைத்தருள் அன்னை அம்புஜலக்ஷ்மி! 16

— முற்றும் —

# மோகன முறுவல்

## விலை ரூ. 2–00.

1. "காந்தியம் கமழுகின்ற இந்தக் கவிதைத் தொகுதி"
—ஆஸ்தான கவி. ஸ்ரீ வே. இராமலிங்கம் பிள்ளை
—முன்னுரை.

2. "ஒவ்வொரு பகுதியிலும் எடுத்துக்கொள்ளும் விடயத்துக்கேற்ப, யாப்பு வேறுபாடும், அந்தந்த ரசம் நன்கு புலப்படத்தக்க சந்தமும் அமைந்திருப்பது போற்றத் தக்கது."
—மதுரைத் தமிழ்ச் சங்கம்.

3. "அழகான பாடல்கள் தமிழுக்குக் கிடைத்திருக்கின்றன.
—ரசிகமணி, ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார்.

4. இக்கீதங்கள் யாவும் கவி வளமும், சொல் வளமும் கலந்து கவின் செய்கின்றன".
—திராவிடக் கவிமணி, ஸ்ரீ வே. முத்துசாமி ஐயர்.

5. "ஆசிரியை ஸ்ரீமதி வாலாம்பாளின் கவித்திறம் பாராட்டத்தக்கதே".
—ஆனந்த விகடன்.

6. "இக்கவிமாது தமது இளமையிலேயே இத்தகைய சிறந்த பண்பாடுகளுடன் துலங்குவது தமிழ் நாட்டுக்கு ஒரு பெருமையே. "இனிதான தமிழ் மொழியில் எளிதான நடையில் கனிவாகக் கவி பாடும் கவி மங்கை வாழ்க" என்போம்".

ஸ்ரீ எம். சண்முக சுந்தரம்,

'புத்தக விமரிசனம்' 27–3–51 அகில இந்திய ரேடியோ,
மதராஸ் நிலையம்.

7. "நல்ல நூல், தூய நூல், பொது நூல், பலவகைப் பாடலில், பல திறப்பட்ட விடயங்கள் தாங்கிய நூல். தமிழர் படித்து இன்புறலாம். அன்பர்கட்குப் பரிசாக வழங்கலாம். சகோதரியார் இத்தகைய நூல்கள் பல தமிழகத்துக்குத் தரவேண்டும்".

ஸ்ரீ. வி. ஜி. ஸ்ரீனிவாசன், மதுரை.

8. "My first glance has demonstrated to me your mastery, not only of the language, but also of true poetic rhythm.

*—Dr. C. P. Ramaswami Aiyer.*

9. "The poems show great poetic talent, patriotic fervour, profound scholarship, and some of the verses, specially those that are describing the life of Nehruji are fit to be recommended as memory lessons for young boys and girls as they are sure to instil patriotism in their imagination."

*—The Indian Express.*

10. "The poems gleam with lustre and impress the readers with the depth of thought contained in them."

*—The Delhi Tamil Sangham.*

---

# "THE VOW OF PANCHALI"*

விலை ரூ. 2–00

1. புத்தகம் அழகிய உருவில் அமைந்துள்ளது. தெள்ளுற்ற தீந்தமிழின் சுவையைப் பிறநாட்டு மக்களும் நுகருமாறு தங்களின் திருத் தொண்டால் வெளி வந்த பாஞ்சாலி சபதத்தைப் பாராட்டுகிறேன். நமது மொழியிலுள்ள நற்கலைகளை—திறமான புலமையைப் உலகப் பொதுமொழியொன்றில் மொழிபெயர்த்தால்தான் பிறநாட்டார் அதை வணக்கம் செய்வர். இதுதான் பாரதியாரின் ஆசையும் ஆகும். மூலநூலின் சுவை குன்ருது மொழிபெயர்த்த தங்களின் திறமையைப் பாராட்டுகிறேன்.

—வித்துவான். கா. நயிஞர் முகம்மது.

2. தங்கள் காவியம் அறிவிற்கு ஓர் இன்பம் தெவிட்டாத தேன்—என்பது அன்பர்களின் துணிவு. முடிவும் கூட.

—திருவள்ளுவர் கலைமன்றம், ஹெளரா.

3. It gave me a great pleasure to read the whole book so nicely rendered with a very little change in a melodious verse form, with meanings unchanged and above all the emotion with which the original script of Bharati is almost unchanged and presented.

—*Bombay Tamil Sangham.*

4. Reading through the translation one gets an insight in to the fervour and greatness of the original composition of Tamil. What more can a translator expect or do?

—*Dr. D. K. Viswanathan.*
World Health Organisation.

5. To-day, I had the pleasure of enjoying your, dynamic pen which had rendered into simple English the peerless masterpiece of my friend—The poet of Indian Renaissance. Amarakavi Bharati shall certainly bless you for your excellent translation.

—*Kaviyogi Maharishi Suddhananda Bharatiyar.*

* தற்சமயம் பிரதிகள் இல்லை.

———

# மோகன முரளி

## விலை ரூ. 3–25.

1. அனைத்தும் நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட நல்லாரம் போலத்தொகுக்கப்பட்டுள்ளன.

அன்பெனும் ஆனந்த அற்புதத்திருமணியைக் கண்டெடுத்த இந்த சகோதரி யான்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக என்று இத்தெள்ளு தீந்தமிழ்க் கவிதைகளை அள்ளி அள்ளி வீசியிருக்கிறார். மும்மொழிச் செல்வியான இவர் தமது விச்சையால் மட்டுமேயன்றி நச்சரவணிந்த நாதன் நல்கிய ஞானத்தால் இக்கவிதைகளை யாத்தனரோ என்ற உணர்ச்சியும் உண்டாகிறது இக்கவிதைகளின் ஆற்றொழுக்கையும், அருவிப் பாய்ச்சலையும் கண்டு இனிய ரீங்காரத்தையும் கேட்கும்போது.

தமிழர் என்று தம்மைக் கூறிக்கொள்பவர்கள், தமிழ் மொழி வளர்ச்சிக்காகப் பாடுபடுகிறேன் என்று மார் தட்டிக்கொள்பவர்கள், தமிழை வாழ்விக்க வாழ்வை அர்ப்பணம் செய்கிறேன் என்று கூறுபவர்கள் அனைவர் கரத்திலும் கருத்திலும் இக்கவிதைத் தொகுப்பு அவசியம் இருக்க வேண்டும். 62 கவிதைகள் கொண்ட இத் தொகுப்புக்கு விலை ரூ. 3–25 என்று போட்டிருப்பது அனைவரும் வாங்க இயல வேண்டும் என்ற இரக்கத்தினால்தான் என்று கருதுகிறேன். அல்லால் முத்துக்கும், பவளத்திற்கும், வைரத்திற்கும், வைடூரியத்திற்கும், ரத்தினத்திற்கும், பச்சைக்கும் நீலமணிக்கும், நிறை பொன்னுக்கும், வெள்ளிப்பணமா விலை?

செல்வி வாலம் மேலும் பல கவிதைகளைத் தமிழ் கூறு நல்லுலகிற்குத் தந்து சீரும் சிறப்புமாய் ஆண்டு பல நீண்டு வாழ மோகன முரளியும் ஆலமார் அண்ணலும் ஆசியருள்க.

ஸ்ரீ எஸ். ஆர். ராமஸ்வாமி, எம். ஏ.

தினமணி (3—8—60) இதழ்

2. ஆண்டாளுக்குப்பின் தமிழ்ப்பெண்குலத்தின் கவிதை மரபு அற்றுப் போகவில்லை, என்று உணர்ந்து மகிழ்ந்தேன். இயற்கைக் காட்சிகளை குழந்தை ஆர்வத்தோடு நோக்கிக் கவிதைகளாக்கும் வேகம் உங்கள் பாடல்களில் இருக்கிறது.

எல்லாம் அழகுமயமான, உள்ளம் உணர்ந்து உருகிப்பாடிய கவிதைகள் என்பது அவற்றைப் படிக்கும் போதே தெரிகிறது.

ஸ்ரீ நா. பார்த்தசாரதி (மணிவண்ணன்)

பசுமலை. (27—7—60)

3. கவிதை உலகில் ஒரு தனியிடம் தங்களுக்கும் உண்டு.

ஸ்ரீ ஸீ. ஆர். அய்யங்கார், உபதலைவர்.

மதராசி சம்மேளனி, ஜாம்செட்பூர்.

4. தமிழ் இலக்கியப் பரப்பில் இவருக்கு உள்ள அகன்ற ஈடுபாடு நூல் முழுமையிலும் காணப்படுகிறது.

“பாரதி” புத்தக விமரிசனம்

ஜூலை இதழ் 1960

5. எங்கிருந்தாலும் கலை, மொழி, நாட்டைக் கருத்தி னில் கொண்டு நலம் பல விளைய நற்பணியாற்றும் தங் களின் கவித்திறன் மேன் மேலும் ஓங்கப் பிரார்த்திக்கி ரோம்.

ஸ்ரீ அழ. வள்ளியப்பா
சில்ட்ரன்ஸ் ரைட்டர்ஸ் அஸோஸியேஷன்.
(28—6—60)
Children's Writers Association

6. பெயருக்கேற்ற நூல். அறுசுவையை நுகரக் கூடிய பெரும் நூல். ஒவ்வோர் பாசுரமும் நம்மை அறி வுடன் போராடச் செய்கின்றது. தங்கட்கு இறைவன் எல்லாச் செல்வத்தையும் கொடுத்து அருள் புரிவாராக.

ஓம் சாந்தி
ஸ்வாமி சிவானந்தா
ஹிருஷிகேசம்—28—8—60

7. பக்திக்கவிதைகள், இயற்கை வர்ணனைக் கவி தைகள் எல்லாம் இணைந்து திரட்டுப்பால்போல் சுவை யாக இருக்கிற கவிதைத் தொகுதியாக இது அமைந் திருக்கின்றது. தமிழறிஞர் தொ. மு. பா. வும் கவியோகி சுத்தானந்தரும் இத்தொகுதிக்கு நல்ல முன்னுரை அளித்திருக்கிறார்கள். ஆசிரியையின் கவியழகுக்கு ஓர் உதாரணம் பார்க்கலாம்.

"பாற்கடல் பொங்குமாபோல்
பனிமதி எழும்பு மாபோல்
கார்க்கடல் அலையுமாபோல்
கற்றவர் சிந்தையே போல்"

என்று குற்றாலத்து அருவிபற்றி எடுப்பாகத் தொடங் கும் கவிதை வரிகளைப் படிக்கும்போது அருவியே கண்

முன் தோன்றுகிறது. ஆசிரியர் குழந்தைமை ஆர்வத்தோடும் கவி எழுச்சிமிக்க மனத்தோடும் உலகத்தைக் காண்பது அவரது கவிதைகளில் நன்கு தெரிகிறது. இதுபோல் மேலும் பல நல்ல கவிதைத் தொகுதிகளைத் தமிழுக்கு அளிக்கும் ஆற்றலை இறைவன் ஆசிரியைக்கு அருளவேண்டும்.

"படித்துப் பாருங்கள்"—கல்கி.
28—8—60.

8. கற்கண்டோ கனிச்சாறே கடலைப்போலக்
கரைபுரண்டு வந்த அருள் வெள்ளந்தானே
அற்புதஞ்சேர் தமிழ் மொழியின் இனிமை யாவும்
அருங்கவியாய் உருப்பெற்ற புதுமை தானே
நற்றமிழர் நாவாரப் பாடிப்பாடி
நல்லின்பங்கொள்வதற்குத் தமிழில் வந்த
பொற்புமிகு புதுநூலோ உரைக்க லாற்றேன்
மோகனஞ்சேர் முரளி அருட் செல்வமென்பேன்.
கனிச்சாற்று மொழியினிலே பக்தி வெள்ளம்
கரைபுரளும் கலைவடிப்பு என்று சொல்வேன்
இனிக்கின்ற சந்தங்கள் இதயந்தன்னை
ஈர்க்கின்ற உருவங்கள் அன்பின் இன்பத்
தனிநிலையில் முகிழ்த்தெழுந்த நிறைவையுங்கள்
தமிழ்க் கவிதைகளில்கண்டேன் இன்னும் சொன்னால்
நனிவேட்கை யுடன்படிக்கத் தூண்டுகின்ற
நற்கவிதை ஓட்டமது ஒன்றே போதும்.

கவிஞர் சு. மு. சொக்கலிங்கம்
வள்ளுவரகம், பழனி.
25—8—60.

9. படிபபோர்க்குச் சலிப்பு ஏற்படாமல் இருக்கும் வகையில் பலவித சந்தங்களில் பாக்கள் புனையப் பெற்றுள்ளன. தமிழர்கள் விரும்பிப் படித்தற்குரிய இனிய பாமாலைத்தொகுப்பு "மோகன முரளி". வாழ்த்துக்கும் பாராட்டுக்கும் உரியவர் "மோகன முரளி" யைத் தந்த திருமதி. ஹா. கி. வாலம்.

"சிவாஜி" —4—9—60 இதழ்.

10. தென்றல் தவழ்கிறது. நிலவொளி வீசுகிறது. செந்தமிழ் கொஞ்சுகிறது. மோகன முரளியைச் சுவைத்ததில் என்னையே நான் மறந்து விட்டேன். தீந்தமிழின் சுவையிலே உங்களுடைய கவிதையின்பம் கலந்து விட்டது. அழியாத இலக்கியக் கொடியில் உலராத பூக்களில் இதுவுமொன்று. உங்களுடைய இச்சிறந்த சேவை மறக்க முடியாதது.

மனமார்ந்த ஆசீர்வாதங்கள்.

ஸ்ரீ ஆர். பி. சன்யாசி.
பராசக்தி ஆச்ரமம், பங்களூர்
17—9—60

11. Renaissance in India has brought out a galaxy of Parnacians. Tamil Literature is rich with such new poets who have fertilised the field of New Life which aspires after unity of soul consciousness.

Mohana Murali is an echo of the inner voice vibrant with the beauty of Nature's vision. We welcome this addition to New Poetry."

"The Call Divine" dated
1 October 1960.

12. In short, your Mohana Murali is a beautiful literary wreath of the religio-socio-lyrico-mystic blend of harmonious symphony, suited to cater to the needs of the young and the old alike-perched in various shades and grades in the ladder of literature.

Sri. T. A. Thirumalachari.

13. Smt. Valam's MOHANA MURALI is worth its weight in gold and her PANCHALI SAPATAM is pregnant with ideas and ideals. She is doing work and worship, converting holidays into holy days. Her good-will is sure to become God-will. On reading her works, one feels that GOD SPEAKS here TO THOSE WHO CAN hear. According to us, she is a true SSLC, since she is an embodiment of service and sacrifice, love and co-operation. May she live long and feel strong to do more useful work with the willing co-operation from the public."

......His Holiness Sri Swami Venkateswarananda,
The Head of Arogya Asramam.

14. This book will be read by generations and God has put such words in your pen that you have immortalised the temples."

—Sri A. Mahadeva Iyer.

15. "The book, I find, is a splendid achievement of yours."

—Sri PMN Swamy.

16. "They are inspired poems and most elevating.

May Lord Krishna bless you with devotion, Bhukthi and Mukthi.

Hari Om Tat Sat."

—Swamy Sivananda of Rishikesh

# "மோகன லதிகா"

## (ஹிந்தி)

### விலை ரூ. 2-00

1. சகோதரி வாலம் அவர்கள் உண்மையான கவயித்ரீ! செய்யுள் யாப்பது — எந்த மொழியானால் என்ன—அவர்கட்கு இயல்பாக வருவது. "இன்பம் உரு வெடுப்பது கவிதை" என்னும் கவிமணி வாசகத்திற்கு இலக்கியமாக அமைந்துள்ளவை அவரது கவிதைகள், "மோஹன லதிகா" வை ஒரு மூச்சிலே படித்து விட்டேன். பெரு மகிழ்வுற்றேன். எனது உளமார்ந்த பாராட்டினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"யின் கவிதையை இன்ப மார் இந்தியிலே இசைத்துள்ளார் வாலம் அவர்கள்! கவிதையிலே நல்ல உயிரோட்டம் உள்ளது. "மீராவும் ஆண்டாளும்," "பக்தி மரத்தின் முப்பழங்கள்," தமிழ் வைணவ பக்தர்களின் சில கவிதைகள் எல்லாம் சிறப் பான கட்டுரைகள்! சமன்வயம்காட்டும், ஒருமைப்பாடு ணர்த்தும் உத்தமமான படைப்புகள்! "நீலமணி" கண் ணப்பெருமானின் திவ்ய தேஜஸைத் தெளிவாகக் காட்டுகிறது. இந்தி மொழியின் மூலமாகவும் தமிழ்ப் பணி புரியும் சகோதரி வாலம் அவர்கள் வாழ்க!

—ஸ்ரீ வி. ஜி. சீனிவாசன்.

2. I feel really proud to find a sister of mine from the pontified south parading with splendour the poetic excellence and the elevating mission of Shri Goda—"The Light of the Universe" in the distant North in Hindi so that the mission of the South will be heard in each and every library, if not exactly in every home in the North. This book is a "Must" for every home,

school and public library. I wish these musical lines in Hindi be echoed through out the length and breadth of our Bharat land.

Sri T. A. Tirumalachari.

3. "You are a genius and your words are sparks of the inner fire. Your Hindi Book is a thrill of souls delight".

—Kaviyogi Maharishi Shuddhananda Bharatiyar

4. P. E. N. Member Shrimati Valam is a scholar of Vaishnava Philosophy and literature. She is also a poetess of eminence. In this volume her Hindi articles and poems have been collected. She has tried to present the Vaishnava outlook on life. This Hindi book will enable the Hindi readers to understand that while geographically North and South may be separate, philosophically they have a common source of inspiration. The teachings of Gauranga Mahaprabhu have permeated all over the country and Shrimathi Valam has successfully emphasised the importance of the BHAKTI movement in modern life. She has presented the life of Aandal in a poem which has considerable poetic excellence. In an article the author has discussed Vyas, the writer of BHAGAVATA, Surdas and Vishnuchita. Her approach is comparative and she has been very successful in pointing out the similarities between the BHAKTI movements of the North and South. Those who are interested in the BHAKTI movement will study this book of poems and articles with great interest.

Sita Ram Jayaswal.
The Ihdian P. E. N.
Jan. 1965-issue.

# "மோகன வாணி"

## விலை ரூ. 3–25.

1. "ஹா. கி. வாலத்தின் வாக்கு கீதைப்பொருளு டன் உற்சாகமாக ஹாக்கி விளையாடுகிறது. வாலம் வாலறிஞை. தமிழகத்தின் மாணிக்கம். பன்மொழிப் புலமையும், தென்மொழித்திறமையும், அருவிப்பேச் சும், ஆவேச வெள்ளமும் பொங்கித் ததும்பும் இந்த அம்மையாரைக் காணும்போது எனது நண்பர் ஹாலா ஸியமே இப்படிப் பெண்ணுருக்கொண்டு பேசுகிறார் என்று தோன்றும்."

— முன்னுரை.
கவியோகி மகரிஷி சுத்தானந்த பாரதியார், சென்னை.

2. "இப்போது வெளிவந்துள்ள ஸ்ரீமதி வாலாம் பாளின் செய்யுள் நடை மொழிபெயர்ப்பு தனிச்சுவையும் விறுவிறுப்பும் கொண்டதாக இருக்கிறது. மொழி பெயர்ப்பு என்ற உணர்ச்சியையே தோற்றுவிக்காமல் தமிழில் செய்யப்பட்ட முதல் நூல் என்ற எண்ணத்தையே ஏற்படுத்துகிறது.

இவ்விதம் கீதையின் பதினெட்டு அத்தியாயங்களை யும் எளிய தமிழில் அகவல்பாவில் மொழிபெயர்க்கப் பட்ட இந்நூல் தமிழன்னைக்கு இடப்பட்ட மணங்கமழும் மலராகும்."

—படித்துப்பாருங்கள், கல்கி
இதழ் 15 நவம்பர் 1964

3. "மோகன வாணி எளிய இனிய நீரோட்டமான நடையில் அமைந்துள்ளது. கீதையை விரும்பும் அனை வரும் இதைக்கற்றுப் பயன் பெறவேண்டும்."

— தினமணி, சென்னை.
இதழ் 13 அக்டோபர் 1964.

4. "சகோதரியாரின் முயற்சி, கீதைப் பிரியர்களின் பாராட்டுதற்குரியது. இந்த நூல் சகோதரி வாலாம்பிகை அம்மையாரின் துணிவையும், தென்மொழித் திறத்தையும் நன்கு வெளிப்படுத்துகிறது. கீதையை விரும்பும் அனைவரும் இதையும் படித்துப் பயன் பெறலாம்."

—தமிழ் நேசன், மலேஸியா
கோலாலம்பூர், இதழ் 1-11-64.

5. "ஓங்கிய தமிழில் உயரும் இந்தியில்
ஆரியம் மற்றும் ஆங்கில மொழியில்
ஆயிரம் ஆயிரம் சுவடிகள் ஆக்கி
அதிசய மதிலே ஆழ்த்தும் இவரின்
"மோகன முரளி"யை முன்னம் பெற்றோம்
முத்துச் சுடர்போல் முகிழ்த்துள்ள இந்த,
மோகன வாணியின் முழுமையு மென்னே.
போர்க்களம் புகுந்தும் போரை மறுத்த
மலைத்தோள் விசயன் மனத்தை மாற்றி
"பொருதுக" என்ற பூங்கமலக்கண்
வண்ணன் வடித்த வாசகத் தேனை
அகவற் பாட்டில் அள்ளி அள்ளி
வழங்கும் இவரின் வண்மையும் பெரிதே.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடிக்குப் பின்வந்த
பாடிக்குவிக்குன்றப் பண்குயில்போல்-நாடியுளம்
ஓதி மகிழ் கீதைதனை ஒண்பாட்டாய்த்
தந்துள்ளார்
ஏதுரைக்க ஒல்லும் எனக்கு"

—பாரத முழக்கம், பழனி.
இதழ் 1-10-64.

6. "திருமதி ஹா.கி. வாலம் அவர்கள், தான் கவிநாரத்னம் என்பதை நாட்டிவிட்டார். அவர் தம் கவிதைகளில் மிகச்சாதாரணமான சொற்கள், பொருளும் வலிமையும் பெற்று படிப்பவர் உள்ளத்தில் பதிந்து விடுகின்றன. நல்லதோர் நூல். யாவரும் படித்துச் சுவைத்துப் பயன்பெற வேண்டியதொன்று இந்நூல்."

—அறச்சுவடு, ஆரணி,
இதழ், 1-11-64.

7. "எளிய நடையில் கவிதை ரஸத்துடன் இந்நூல் அமைந்திருக்கிறது. தங்கள் முயற்சியால் வெளிவந்துள்ள இந்நூல் தமிழ் மக்களுக்கு நன்கு பயன்படும் என்பதில் ஐயமில்லை."

—தர்மசக்கரம்,
திருப்பராய்த்துறை, திருச்சி.
15–8–64 இதழ்.

8. "பகவத்கீதை நேர்த்தியாகத் தமிழ்க் கவிதையில் கொடுக்கப்பட்டுள்ளது. மொழிபெயர்ப்பு தெளிவாகவும், இனிமையாகவும், அழகாகவும், இயல்பாகவும் அமைந்துள்ளது. தத்துவக் கருத்துக்கள் நெருடில்லாமல், ஆற்றொழுக்காக அங்கங்கே திட்பநுட்பத்துடன் விளக்கப்படுகின்றன. பகவத்கீதைக்கு இத்தகைய ஒரு மொழிபெயர்ப்பு வந்தது தமிழர்களின் நல்வினை என்று சொல்லலாம். தாங்கள் நீடூழி வாழ்ந்து இது போன்ற நூல்களை மேலும் மேலும் எழுதித் தமிழ் அன்னைக்குச் சூட்ட வேண்டும் என்று விழைகிறேன்."

—தமிழ் எழுத்தாளர் சங்கம்
சென்னை 21–7–64.

9. "தமிழ்த் தவக் கவியோகி சுத்தானந்தர், "வாலம் வாலறிவை, தமிழகத்தின் மாணிக்கம்" எனப் போற்றிய பின்னர் என்போன்றோர் சொல்வதற்கு என்ன உள்ளது. நன்னயப் பொன்னூலொன்று நாட்டுக்கு நல்கிய நங்கையார் நன்கு வாழ்க. நற்றமிழ்ப் பணி நெடிது நடைபெற்றிலகுவதாக."

—தமிழ் எழுத்தாளர் சங்கம்,
மதுரை, 21—11—64.

10. "இனிய தமிழிலே, எளிய நடையிலே பெரியதோர் பொருளாகிய கீதையைத் தமிழகம் சுவைக்க, தமிழர்களுக்கு ஒரு செல்வத்திறவுகோலாகச் செய்து தந்த திருமதி வாலம் அவர்கள் பணி சிறந்தது. நிறைந்தது.

நூலின் உட்புகுந்து அதன் உயர்வுபற்றி பலப்பல எழுதுவதைவிட அவர்கள் வாக்காலேயே,

"புண்ணியமாம் பேருரை தன்னை
எண்ணுந்தோறும், எண்ணுந்தோறும்
மகிழ்வும் வியப்பும் ஒருங்கேஎய்தி
மகிழ்ந்து மகிழ்ந்து சுவைக்கும்."

வாய்ப்புடைய ஒரு நூலை உருவாக்கித் தந்த சகோதரி வாலம் அவர்கள் தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஒரு முக்கிய தேவையைப் பூர்த்தி செய்தவர்கள் ஆவார்கள். அவர்களுடைய இலக்கியப்பணி, ஆர்வம் தருகின்ற சொற்றிறன், எழுதும் ஆற்றல் அனைத்தும் பயன்கொள்ளும் தமிழ் இலக்கியமும், தமிழ் மன்றங்களும், குறிப்பாகத் தமிழ் சமுதாயமும் பாக்கியசாலிகள், இந்த பாக்கியங்கள் பல நெடுங்காலம் பழகி வளர்ந்து பயனுடைத்தாகப் பாங்குற அமைய தமிழ்த்தாயும், மோகன வண்ணன் "கீதாசாரியனும்" அருள்வாளுக."

சங்கச்செய்தி, பம்பாய்த் தமிழ்ச் சங்கம்.
டிசம்பர் 1964.

11. "பக்தி ரசம் நிறைந்த செங்கரும்பு கீதை. அச்செங்கரும்பைச் சீவி சிறுசிறு துண்டுகளாக்கி தேனில் தோய்த்து "மோகன வாணி என்ற திரு நாமம் சூட்டித் தமிழுலகிற்குத் தந்துள்ளீர்.

உங்களது புலமை என்ற சோலையில் புதுப்புதுமலர்கள் பூத்துப் புன்னகை புரியவேண்டும் என்பதே அன்பர்களின் ஆவல்."

—குந்தக்கல் தமிழ்ச் சங்கம்.
25-8-64.

12, " தங்கையே உந்தன் தண் இதயத்திற்
பொங்கி யெழுந்த பொன்கவி நூலாம்
மும்மல நீக்கும் மோகன வாணி
கம்மிய அறிவினேன் கரத்தில் சேர்ந்தது
கடிதமும் வந்தது கழிபேருவகை
படிதனில் நீசெயும் பணியின் சிறப்பை
என்னென் றுரைக்க எளியேன் கடவேன்
மன்னிய கலைகளில் வல்லுனர் பலப்பலர்
பாராட்டியிருப்பதுதானே சாலும்
தேரோட்டியாகிச் செம்மலர்ச்சுனர்க்கு
ஞானமும் வீரமும் நல்கிய கண்ணனின்
தேனமுதச்சுவை செறிந்தமாகீதையைப்
பாமரர் தாமும் படித்துப்பயன்பெறத்
தோமறு தமிழில் தொகுத்தனை அம்மா!
வாழிய நின் பணி வாழிய நின் புகழ்
வாழி நீடூழி. மனிதகுலத்தின்
மேதரு வாழ்க்கைக்கு வேண்டிய தொண்டுகள்
போதிய அளவு புரிந்தினு மாதோ."

—அன்புத் தொண்டு நிலையம்,
செங்கற்பட்டு 6-8-64.

13. "வாலறிவு கொண்டிலங்கும் வண்ணத்தமிழ்
அன்னேயும்
நூலறிவு யாம்நுவலப் போமோ?
நுண்மையுடைய
சீலமுறும் திருமாலின் நாவுரைத்த
கீதைதனின்
ஞாலம் விழை நன்மொழியின்
வடிவுகண்டோம். மகிழ்ந்தோம்.

" அணிந்த கந்தலாம் ஆடையைக்களேவோம்
புனேவோம் அலவா புதியதோர் உடையை?
துணிந்து அதுபோல் உடல்எனும்
துணியைக்
களேந்து வேறுடுப்பான் ஆன்மா என்பான்."

என்கின்ற எழில்வரி இயம்பிடும் கருத்து
இன்றெமக் கீந்திட்ட எழில்மிகு கருத்தாம்
விண்டிட்ட மேற்கோள் வியந்திட வைத்தது
கொண்டிட்ட மதிப்பும் குன்றென
உயர்ந்தது!

" சகல கலாவல்லியும் " மின் சத்துடைக்
கவிதன்னேப்
புகலவும் இயலுமோ புதுமொழி
கொண்டுயாம்?
சகலகலா வாணி சரஸ்வதியம்மை வாழும்,
நற்கலேக் கூடமாகும் தாயும்மின் மனமும்!

மதுர கீதம் மனமகிழ்ந் திசைத்திடும்
" மதுர கவிஞர் " முருகேச மாண்பார்
பெயரால் திகழுறும் பெருமன்றச்சார்பில்
உயிராம் வாழ்த்ததை உவப்புடன்
அளிக்கிரும்!

"மோகன வாணி" யெனும் மோகனத்
தலைப்பிலே
மோகனக் கண்ணனுரை மொழிந்திட
முன்வந்த
மோகனக் கவிதா முழுமதி ரத்தினமே
மோகன ஒளிவீசும் முழுமதியாய் ஒளிர்கநீவிர்!"

—கவிஞர் முருகேசனார் மன்றம்
பம்பாய்—17. 7—9—64.

14, "தேசபக்தர் பரம்பரையில் தோன்றி, அருட் செல்வமும், கல்விச்செல்வமும் ஒருங்கேயமையப் பெற்ற, அந்த, அம்மையாருக்குக் கீதையில் உள்ள புலமையினையும், கீதைச்செல்வத்தை வையத்திற்கு வாரி வழங்க வேண்டும் என்பதில் உள்ள ஆர்வத்தையும், "மோகன வாணி" நூல் புலப்படுத்துகிறது. அவரது தொண்டு நாளும் சிறப்பதாக."

—கனம் எம். பக்தவத்சலம்,
முதலமைச்சர், சென்னை. 29—8—64

15. "எண்ணங்களை எழுத்தாற் சேர்த்து
எண்ணற்ற கவிகளாக்கும்
பெண்ணில்நல் அன்னைசக்தி
பெரும் அருளால் வாழும் தாயே
பண்சொல்லிப் பாரில் சுற்றும்
பித்தன் உன்பாடல் எழுத்தைக்
கொண்டின்ப அன்பைக் காண
குழைந்தேன்உன் அருளில் தாயே
ஓயாதஎண்ணம் அதனை ஒருகோடிக்கவிகள்
ஆக்கி
காயாத கனியாம் தெய்வக்கருணைமா
அருளைப் பெறுவை

வாயாதநிலைகள் சித்தி வரமென்று
ஒன்றுமில்லை
ஆயாத அறிவின்தெளிவே அன்பின்ப
அன்னை அதுவே''

—பித்துக்குளி முருகதாஸ்
தீனபந்து ஆசிரமம், சென்னை–53

16 "மோகன முறுவல்" "மோகன முரளி" முதலான நூல்களை இயற்றிய ஸ்ரீமதி ஹா. கி. வாலம் அம்மையார் நெஞ்சை அள்ளும் கவிதைகளைப் பாடி அறிஞர் உள்ளங்களை ஈர்க்கும் சிறந்த மேதை வாய்ந்தவர். அம்மையாரின் மதி நுட்பமும், சம்ஸ்கிருதம், தமிழ், இந்தி எனும் மும்மொழிகளிலும் பெற்ற தேர்ச்சியும், கற்பனை வளமும், கவிதையின் ரசமும், சொல்லோவியம் வரையும் திறனும் தமிழுலக வானிலே அவரை மாலைமதியம் போலத் திகழச்செய்து விட்டன. அன்னார் 'மோகன வாணி'' யென்னும் இந்நூலைப் பாலர்க்குரிய பகவத்கீதையாக அமையுமாறு தமிழில் அகவற்பாவிலே யாத்துள்ளனர். பெரும்பாலும் இது கருத்துச் சிதைவின்றிய மொழிபெயர்ப்பாகவே அமைக்கப்பட்டுள்ளது. சிற்சில இடங்களில் மூலத்தின் கருத்தைத் தழுவி விரித்தும் விளக்கியும் உள்ளார். தமிழ்நடை எளிமையும் உறுதியும் இனிமையும் ஒருங்கே அமைந்து, உள்ளத்து ஊறும் பலவகை உணர்ச்சிகளையும் ஏற்றவாறு வெளிப்படுத்தும் ஆற்றலோடு, "சொன்னோக்கும் பொருணோக்கும் தொடைநோக்கும் நடைநோக்கும் இணையப் பெற்று, ஆற்றொழுக்குப்போல ஓடி ஆன்ற பொருள் தந்து, சிந்தனைக்குந் தூண்டுகோலாய் மிளிர்கின்றது. பற்பல இடங்களில் தமிழாக்கம் விளக்கமும், சுருக்கமும் எடுத்துக்கொண்ட ஞானப்பொருளுக்கேற்ப காம்பீரியமும் எய்தி நிற்கின்றது. முதனூலில் உள்ளதை உள்ள

வாறே முற்றும் மொழிபெயர்க்கும் எண்ணமும், முதனூலைப்போல் பல உரையாசிரியர்களின் கருத்துகட்கு இடந்தருமாறு சொற்களை அமைக்கும் நோக்கமும் நூலை இயற்றியவர் கொண்டதாகத் தெரியவில்லை; அருச்சுனனுக்கு நிகழ்த்திய அறிவுரைக் கருத்தின் சாரத்தை வழங்குவதே அவர் மேற்கொண்ட பணியாயிற்று; அதில் அவர் வியத்தகும் வெற்றியடைந்துள்ளனர் என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். மேலும் பாலர்க்காக எழுதப்பட்ட நூலிலே சமயக்கருத்து நுணுக்கங்கள் அத்துணை அவசியமும் ஆகா. பாலர்க்காக எழுதிய நூலாயினும் கற்றோராம் முதியாரது பாராயணத்திற்கும் சிந்தனைக்கும் பயன்படும் என்பதில் ஐயமின்று அறிஞர் ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரது முன்னுரையையும் நூலை இயற்றியோரின் வரலாற்றுக் குறிப்புகளையும் நூல் கொண்டுள்ளது. நூல் நல்ல தாளிலே மிகப் பெரிய எழுத்திலே அழகுற அச்சிடப்பட்டிருப்பதும் பொருத்தமே. இந்நூலைத் தமிழகத்து ஆடவரும் மகளிரும் வாங்கிக் கசடறக்கற்றும், அதற்குத் தக ஒழுக்கம் வாய்ந்து நின்றும் ''மற்றீண்டு வாரா நெறி'' யினிற் செல்லுமாறு வேண்டுகிறோம்.

—ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்
குரோதி, மாசி. சென்னை-4.

17 ''பெரும் பயன் நல்கும் பெட்டகம்''

'' நீரில் தண்மையாய் நெருப்பில்
வெம்மையாய்ப்

பாரில் எங்கும் பரமனே உள்ளேன்
நன்மையும் தீமையும் நல்குவன் யானே,
புன்மையைப் பொசுக்கிப் புரப்பதும் யானே
ஆணவம் கன்ம மாயையை அகற்றி
ஞான நெறிதனில் நடப்பது கடனே

கடமை புரிந்தோர் கட்டறுத் தென்றன்
அடியாம் திருமலர் அடைகுவர் என்றே
கண்ணன் களத்திற் காண்டீபனுக்குச்
சொன்ன மெய்ப்பொருள் துலங்கிடுங்கீதையைச்
சொற்சுவை பொருட்சுவை துளியுங் குன்றுமல்
ஞாலம் உய்ய நற்றமிழ் மொழியில்
வாலம் அம்மையார் மோஹனவாணியென்று
அருளிய நூலது அமிழ்தினும் இனிய
பெரும்பயன் நல்கும் பெட்டக மாகும்.''

— டி. வி. ஸ்ரீகாந்த சாஸ்திரி, எம். ஏ.,
கல்லூரி முதல்வர், சம்ஸ்கிருத கல்லூரி,
மதுரை. 20—2—65.

18. "வியாச முனிவர் வடமொழிச் செய்யுட்களையே தென்மொழியில் செய்யுட்களாகப் பெயர்த்து நமக்கு அளித்த திருமதி ஹா. கி. வாலம் அவர்களை நாம் மற்றொரு வியாச முனிவராக மதிப்பிடுவது மிகையாகாது.

தவிரவும் ஆங்காங்கு சிக்கல் பொருந்திய வடமொழி வசனங்களை விரிவுபடுத்தி உரைபோல் யாவரும் நன்கு உணரும்படி செவ்வனே செய்யுட்களாயமைத்துத் தனது முதிர்ந்த அறிவையும் கவித் திறனையும் கல்விப் பண்பையும் வெளியிடும் ஆசிரியையின் மோகன வாணி கண்ணனருளிய தென்மொழி வாணியாகவே விளங்குகிறது.

அரிய பெரும் முயற்சியால் "மோகன வாணி"யை இயற்றிய திருமதி. வாலம் அவர்கள் அறிஞர்களின் அரிய போற்றுதலையும் அழிவில்லாத புகழ்ச்சியையும் அடைந்து நீடூழிவாழ்வாராக.''

— ராமஸ்வாமி சாஸ்திரி,
பம்பாய்-71. 27—6—64.

19. "நீங்கள் தமிழ் அன்னைக்கு அணிந்துவரும் இசை மாலைகள், சொற் சிலம்புகள், மொழி ஆபரணங்கள், தென்குமரியை சதா காலமும் அலங்கரித்து நிற்கும். புதுமைப் பெண் பகவத்கீதையைப் பாடுகிருள் எனப் பாரதி வானிலே செவியுற்றுப் பூரித்துத் தாண்டவமாடுவர்."

Her 'Mohana Vani' is a Tamil version of Gita for children. It can also be read by adults with great profit and pleasure. She brings forth the hidden truth of Lord's song in easy Tamil verses which deserve to be committed to memory. It can be daily read like Sanskrit Gita.

—M. R. Jambunathan,
Editor, Vedas & Upanishads,
Bombay. 5 Nov. 64.

20. "நூலைக் கற்பவர்கள் கீதையின் பெருமையையும், உங்கள் புலமையின் பெருமையையும் ஒருங்கே நன்குணர்வர். அகவல் அடிகளாகக் கீதையை யாத்திருப்பது கல்வி நிரம்பாதவர்களும் பொருளுணர்ந்து கற்கப் பேருதவி புரிவதாகும்.

இங்ஙனம் இந்தியப் பெரு நூல்களில் சிறந்த ஒன்றை, சாமானியர்களும் எளிதிற் கற்றுப் பயன்பெற உதவும் உங்கட்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றது."

சா. கணேசன்,
காரைக்குடி. 5—2—65.

21. "Mohana Vani — the new release - is an exact transversification of the Bhagavat Gita in Tamil, rendered in a very effective medium of verses as an aid to memory and immortality. The work is chaste. It is

faithful to its original. The rendering - as the very Caption indicates - is very enchanting; and the 18 long and more often difficult Cantos have been rolled into the sweet and simple, melodious an meaningful lines of Version in Tamil. The texture of the work in the garb of Tamil is indeed elegant and excellent. The title itself indicates the clientile, it deserves to serve; and I am sure it can and it has done well. Herein is patent the dexterity of the magic pen of the authoress that puts the mystic frame of the Geetha - the beacon - fitted with the glass of varied hues and various commentaries and translations in many a language - in a very interesting and telling way. Srimathi Ha Ki Valam has done a signal service to the immortal, Song Celestial " Bhagavat Geetha " in her inimitable way which is at once grand and superb. "

*TA. Thirumalachari,* B. A.,
Ettayapuram. 6—8—64.

22. " Your book tastes like honey and flows like the flute of Mukkan Chor.

The book is praiseworthy and will be a permanent contribution to the revered Vedic Literature. You have gone a step higher in the spiritual plane than " *வேதவ்யாஸர்* " translating the Verse 23. Chapter I.

" *துர்புத்தி* " is the only jarring word in the whole of Gita; you have put it as " *கண்ணிலான் மைந்தன்* " This is a beautiful improvement for "*தார்த்தராஷ்டரா*" who had not got the " *அகக் கண்* ".

Well done, Well done.

The language is spontaneous and flows like the unending waves in the ocean of devotion. **This is the outstanding work in Tamil of the Independent era of India.**

This book on the whole is a production of the will of God whose nectar of bliss permeates the whole composition.

I am assigning a place for your Book in my Pooja along with Gita, Bhagavatam and Ramayanam.

—*Sri A. Mahadeva Iyer,*
Jamshedpur.

23. "Sri Krishna's Immortal Message of Dharma to the Humanity for all times has found a flowing pen in your sincere hand. It is really a good work.

குழலின் கருத்தைக் கீதையில் வடித்தான் பார்த்த சாரதி. அதை அழகாக ஓடவைத்தாள் "மோகன வாணி" இனிய தமிழ்ப் பெருக்கிலே. உபநிஷத்தின் சாரத்தை சுவைக்கும் பொழுது கண்முன் காண்கின் றோம் "மோகன முறுவலை".

"I am really proud of your achievement."

— *Sri C. R. Iyengar,*
Jamshedpur.

24. "This will be a valued possession with me."

— *Sri C. R. Pattabhiraman,*
New Delhi.

25. "Srimathi H. K. Valam the daughter of the wonned patriot and lawyer of Tiruchi, has rendered there GITA in Tamil verse, adopting the lucid and

smooth-sailing metre of AHAVAL. The translation is faithful and simple-simpler than many of the prose translations. How one wishes that children can learn and sing it. Even the highest and intricate sayings have been driven home by this simple but fast-moving chain of verses. For readers it is a 'must'.

—*Bhavan's Journal*
17 Jan. 65.

26. "Your poetic exposition of the Message of Bhagavat Gita is so thrilling and illuminating that every reader will be spiritually absorbed in the unique presentation of the spiritual theme; You have really imbibed your father's peerless genius for the linguistic profundity and interpretation of the inner spirit of glory, as revealed in your poetic composition with a universal message for all. You have really enriched Tamil Literature by your poetic adventure of deeper vision and loftier understanding. Your poetic genius is really versatile and melodious indeed!"

—*V. R. M. Chettiar*, B. A.,
Progressive Publishers, Karaikudi.
2nd September 1964.

27. "Srimathi Valam has presented in very simple Tamil poetry, the Bhagavat Gita. In 18 Chapters and under suitable headings she has translated in flowing language the great teachings of Sri Krishna. It is a delight to see the flavour and beauty of the original completely retained.

*Hindu, Madras*
11 October 1964.

28. Shrimathi VALAM'S translation of the Gita is straightforward and has an immediate impact. It breathes the spirit of the original. Even where the great commentators have failed to co-ordinate the apparent conflicting ideas found in the Sanskrit original, she has succeeded in linking them together lucidly in Tamil, in a proper perspective. Her poetry is unlaboured and flows easily like the waters of a river.

Like the late Desika Vinayagam Pillai, who rendered Omar Khayyam and THE LIGHT OF ASIA, she has accomplished her task with merit and distinction.

The book is intended for children but can be read by adults too with profiit and pleasure. This is not just one more book in Tamil. It is a valuable contribution worthy of study.

*Indian P. E. N.,*
(August 65 issue)

---

# ஆசிரியையின் பிரசுரமாகாத நூல்கள்

## 1. தமிழ்

| பெயர் | குறிப்பு |
|---|---|
| **அ. கவிதை** | |
| 1. பால நீல மணி. | பாகவதம். |
| 2. பாரத சுப்ர பாவம். | பாரதப் பெருமை. |
| 3. விண்ணப்ப மாலை. | துளசிதாசர் விநயபத்திரிகா. |
| 4. சத்துருக்கின சரிதம். | |
| 5. பரதப்பிரதாபம், | |
| 6. எம்பிரான் ஐம்பது. | |
| 7. அன்புப்பொற்சரடு. | நாரதர் பக்தி சூத்திரம். |
| 8. திருமால் திரு ஆயிரம். | விட்டுணு சஹஸ்ர நாமம். |
| 9. வடிவழகி திரு ஆயிரம். | லலிதா சஹஸ்ர நாமம். |
| 10. அற வழி. | புத்தர் தம்ம பதம். |
| 11. அழகின் அலை. | சங்கரர் செளந்தரிய லகரி. |
| 12. தனிப் பாடல்கள். | |
| **ஆ. உரை நடை** | |
| 1. பால பாகவதக் கனி. | சுகர், ஸுர்தாஸ், பெரியாழ்வார், ஒப்புநோக்கு. இலக்கிய விமரிசனம். |
| 2. சொற்பொழிவுகள் தொகுதி. | |
| 3. கட்டுரைகள் தொகுதி. | |
| 4. இலக்கிய இன்பம். | |
| 5. மொழிச்செல்வம். | |

இ. நாடகம்

1. தெய்வச் சிலம்பு. — இளங்கோ சிலப்பதிகாரம்.
2. கருணை முகில் அல்லது புத்தசோதி. — புத்தர் வரலாறு.
3. மாங்கனி மாணிக்கம். — காரைக்கால் அம்மையார் வரலாறு.

## 2. ஹிந்தி

கவிதை.

1. பாஞ்சாலி சபத்
2. கோயல்
3. பாரதி கவிதைகள்

(1–3:) அமரகவி பாரதியாரின் பாஞ்சாலி சபதம், குயில், மற்ற கவிதைகளின் மொழி பெயர்ப்பு.

4. மோகனக்குறள் ... திருவள்ளுவர் திருக்குறள்
5. மோகன் மயூர் ... மயில் விருத்தம்
6. மோகன் சக்தி ... வேல் விருத்தம்
7. ஸ்கந்தகீ அனுபூதி ... கந்தரனுபூதி — அருணகிரிநாதர்

## 3. வடமொழி

1. புஷ்ப சோதி, 2. தரங்கித கங்கா, 3. பாரதபராபவம், 4. வனசம்பத்து, 5. கிராம நகரௌ.

## 4. ஆங்கிலம்

1. அவர் லீடர், கோவலன், முதலியன.

---

(பிரசுர கர்த்தாக்கள் இவைகளில் எதையாவது பிரசுரிக்க விரும்பினல் ஆசிரியைக்குத் தயவு செய்து எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்).

